M. R. P. M.
Series
No. 2.

விதியை மதியால் விலக்கிய

# விவேகானந்தன்.

# Vivekanandan

An Interesting Tamil Novel





By

**Kaviraya Kandasawmi Pillai**

Published by

**M. A. Pachaiappa Mudaliar**

PRINTED AT THE

CHITTI VINAYAGAR PRESS, MADRAS.

1914

 [Price As. 8

TITLE PAGE ONLY PRINTED AT THE S. V. PRESS, VEPERY, MADRAS.

உ

சிவமயம்.

விதியைமதியால் விலக்கிய

# விவேகானந்தன்.



இஃது

மதுரைமாநகரம்

கவிராஜ கந்தசாமிபிள்ளை யவர்களால்

இயற்றப்பட்டு,




இவை

எம். எ. பச்சையப்ப முதலியாரால்

வெளியிடப்பட்டது.

சென்னை-புரசை:

ஸ்ரீ சித்திவிநாயகர் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.



1914.

இதன் விலை அணா 6.

உ

சுந்தரகணேஸ குருவேதுணை



# விதியை மதியால் விலக்கிய
# விவேகானந்தன்

| | |
|---|---|
| **Act 1** | **Scene 1** |
| இடம் | தர்மபுரி |

### கதாநாயகர்

| | |
|---|---|
| அரசன் | அமிர்தவசனன். |
| இராணி | இரஞ்சிதபூஷணி. |
| மந்திரி | மதிவல்லபன். |

ஸ்ரீ நலாவியநற் செந்தமிழ் பரவும் பரதகண்டத்திற் சிறப்புறும் நந்நகரென பொங்கர் புரந்தரனும் புகழ்ந்துரைக்கும் பெருமை வாய்ந்த தர்மபுரியைப் பரிபாலனஞ் செய்திருந்த அமிர்தவசன மஹாராஜனுக்கு அநேககாலமாய் புத்ரபாக்ய மின்றிய சித்தப்ரம்மையுடன் திகைத்திருந்தனன். ஆனால் அம்மன்னன் செங்கோன்முறை சிறிதும் பிசகிலன். நீதிநெறி வழுவாதிருப்பன். சத்யவாய்மையமைந்த தராதிபன். தன்னுயிர்போல் மன்னுயிரைமதிக்கும் மகிபன். ஜீவகாருண்யன், ஆவலோடு அரண்மனையணுகி அபயம் அபயம் அரசேந்திரா யென்றிரக்கும் யாசகர்கட்கு அஞ்சேலென அபயாஸ்தமளித்து அவரவர்கள் மனதிற்கிசைந்த விதமாய்ப் பொருளுதவிபுரியும் புண்ணிய மன்னன் குடிபடைகளை கண்ணிமைபோற் காப்பாற்றும் காருண்யன், தரணிபரிற்சிறந்த கருணாநிதி இத்தகைய நற்குணம் நற்செய்கை தனக்கமைந்தும் மனையாளோ மஹாபதிவிரதை கற்புக்கரசி சத்யவாசகி நற்குணமமைந்தவள் இத்தகைய உத்தமர்கட்கு புத்ரபாக்யமின்றிய கொடுமை யாதெனின் முன்ஜனனத்தின் கொடுமையென்றே புகலவேண்டுமன்றி மற்றவை யன்றென மாநிலம்புகலும் இத்தகையதாய்ச் சதிபதி மனவிசாரமுற்று முகவாட்டமாயிருந்தனர். இவர்கள் மனக்குறிப்பையுணர்ந்த மந்திரியானவன் மனமெலிந்து அடடா சாந்தமூர்த்திகளாகிய நமது இராஜ

இராணிக்கும் இத்தாதிமனவருத்தமெய்துங்காரணமென்ன யாமதை கவனித்து, அவர்கட்குத் தேறுதலுரைத்து வருகுதுமென, தெள்ளிய மனத்தினனாய் ஓர்நாள் தனதில்லத்தினின்று மீண்டு அரணனுகி சதிபதியிருக்கும் மாளிகையிற் சென்றனன். இவன் வருகையை கண்ணுற்ற அரசன் மகிழ்வெய்தி விசாரிப்பதாயினன்.

அமிர்தவசனன்:—அமைச்சன்! யாதுகாரணமாய் இவணுறைந்திர் யாதேனும் விசேஷமுளவாயின் வெளியிடும்.

மதிவல்லபன்:—அரசே! தாங்களனுதினமும் மனவிசாரமாயிருப்பதனால் எனதுளம் பலவிதமாய்ச் சந்தேகிப்பதாயின ஆகலின் நும்மனக்குறையாதோ வெளியிடுவீரென் றன்புடன் வினவுதலாயினேன் திருவுளமிரங்கி யுரைக்கவேண்டும்.

அமிர்தவசனன்:—அமைச்சா! உலகிற் பிறந்த மனிதர்கட்கு தனயர் பாக்யமே பாக்யம் மகப்பேறின்றியவர் ஜகமிருந்தும் பயனென்ன? துர்க்குணத்தினர்கட்குபுத்திரபாக்யம் விசேஷித்தும் நற்குணத்தினர்கட்கு மகப்பேறின்றிய மலடாயிருக்கும் காரணமென்ன? இவையனைத்தும் யான் நெடுநாளாய் ஆலோசித்திருந்தேன் எனக்கு அவைகளின் விபரம் தெள்ளிதாய் விளங்கவில்லை யானோ மனமறியகிஞ்சிற்றும் துர்க்குணத்தை வகித்திலேன், கொடுங்கோன்மை புரிந்தறியேன், கிழோராயினுந் தாழ்வுரையென்னுந் தன்மையாய் யான் குடிபடைகளையும் எனதுபந்து மித்திரர்போற் பெருமையாய் மதித்திருக்கின்றேனே இத்தியாதி நன்மனதா யரசோச்சுமெனக்கு புத்ரபாக்கியமிலாத காரணமென்ன?

மதிவல்லபன்:—அரசே! உள்ளிய தெள்ளியராயினும் ஊழ்வினைப் பய்யநுழையும் நாம் எத்தகைய நற்குணம் பொருந்தியவர்களாயிருப்பினும் நாம் முன் ஜனனத்திற் புரிந்த ஊழ்வினையால் இந்த ஜனனத்தில் அவற்றிற்கிசைந்த சுகதுக்கத்தை யனுபவிக்கின்றோம் ஜனனகாலத்திருந்து சந்யாசியானவரையிலும் சதாபகவத்பக்தியானமாயிருந்த பட்டினத்துச் சுவாமிகட்கும் ஓர்காலத்தில் குற்றம்நேமித்து கழுவிலேற்றத்துணியுமுன் கண்ணுற்ற சுவாமி சீற்றமிலாது முகவாட்டத்துடன் கழுவை நோக்கி! சதென்ன விந்தை?

## கட்டளைக் கலித்துறை.

என்செயலாவ தியாதொன்றுமில்லை இனித்தெய்வமே
உன்செயலேயென் றுணரப்பெற்றேனிந்த வூனையெடுத்த
பின்செய்த தீவினையாதொன்றுமில்லை பிறப்பதற்கு
முன்செய்த தீவினையோ இங்ஙனம்வந்து மூண்டதுவே?

எனப்பாடியருளினார். அக்காலக் கழுமரம் பற்றியெரிந்துபோயிற்று அவ்விதமே ஒவ்வொருவருக்கும் முன் ஜனனத்தாற்செய்யும் பாபபுண்ணிய அளவிற்கேற்ப சுகதுக்கம் வாய்ப்பது உலகியல்பு அவற்றைக்குறித்து தாங்கள் விசனமுறாதீர். பகவான் கிருபாநோக்கத்தால் உமது தர்மகுணத்திற் கிசைந்தனவாய் சற்புத்ரபாக்யம் பெற்று சுகமுற்றுய்வீரென மனதைரியம் புகன்று தனதில்லத்திற் கேகினன்.

இங்ஙனம் நிற்க, மஹாராணியாகிய இரஞ்சிதபூஷணி மனவிசார மடைந்தவளாய் மணாளன் முகத்தைப்பார்த்து பிராணபதி! யாம் இவ்விதமாய் விசனிப்பதாற் பிரயோசனமில்லை. கானிற்சென்று கர்த்தனை துதித்து பக்தியானந்தமாய்த் தபஞ்செய்தாகிலும் புத்திரபாக்கியம் பெறுவதே சிரேஷ்டமாகுமென்று மிகவும் பரிதாபமாய்ப் புகன்றனள்.

அவ்வார்த்தையைக் கேட்ட அரசனும் அவ்விதமே புரிகுதுமென்புகன்று சற்றுமனதைரிய முடையவனாய் தனது வழக்கப்படியே ஆடை ஆபரணசிங்கார அலங்கிர்தனாய் நவரத்ன மணிமகுடம் சிரசிற்சூடி கரத்திற்செங்கோலேந்தி சிம்மாசனத்திற் போயமர்ந்தனன். அரசன் வருகையை யுணர்ந்த மந்திரி பிரதானியரனைவரும் மனமகிழ்ந்து மன்னனுக்கு வந்தனைவழிபாடுகள் செய்துபணிந்தனர். அரசன் தேசவிசாரணைபுரிந்து, குடிகள்மீது கருணையுடையவனாய் சிம்மாசனத்தி லமர்ந்திருக்கையில் ஓர் சந்நியாசியானவர் அரண்மனையில் வந்தனர்.

அரசன் மஹானைப்பணிந்து சுவாமி தாங்கள் எளியேன் முன் பிராப்தமானது எனது மாதவமேயென்றுபணிந்து ஓர் ஆசனமீதிருத்தினன். அம்மஹான் இம்மன்னனுடைய முகக்குறிப்பை யுணர்ந்து அரசே தாங்கள் புத்திரவாஞ்சையினால் மனசஞ்சல முற்றவராய்க் காண்கிறது இதைப்பற்றித்தாங்கள் யாதொரு மனசஞ்சலமு மெய்தாதீர். உலகிற்பிறந்தவர்களில் அவரவர் பாபபுண்ணியத் தளவின்படியே சுகதுக்கத்தை யநுபவிப்பதற்காகுமன்றி வீண்யோசனை புரிவ

திருந் பிரயோசனமென்ன? நீ இந்த ஜனனத்திற் புண்ணியவதியா யிருக்கின்றாய் ஆனால் முன்ஜனனத்தின் வினையே தற்சமயம் அனுப விக்கும்படியாய் நேரிடும் தற்சமயம் செய்யும் பாபபுண்ணியத்திற் கிசைந்த சுகதுக்கத்தை மறுஜனனத்தில் அனுபவிப்பதற்காகும் ஆகையால்,

## அறுசீரடி யாசிரிய விருத்தம்.

அவரவர்கள்செய்தவினை அவரவரேயனுபவிப்பர் அவனிமீது
தவறுதலென்றுணர்வதெல்லாம் மதியீனத்தாலன்றித் தப்பிதந்தான்
கவனமுடனொவ்வொன்றும் ஆராய்ந்துபகுத்துணர்ந்து கருதல்வேண்டும்
அவனிமிசைஉத்தமர்கட் குற்றவையென்றுணர்வோர்கள் அறிவுள்ளோரே.

என்பதாயிருக்கிறதே உலகியல்பு ஆகையால் நீ இதைக்குறித்து யாதொரு மனவருத்தமு மெய்தாதே யான் ஓர் எலுமிச்சங்கனி கொடுக்கின்றேன் அதை மஹாராணியிடங் கொடுத்து புசிக்கச்செய் வீராகில் உத்தமகுணமமைந்த புத்திரன்ஜனித்து வெகு அற்புதங்கள் செய்து கீர்த்தியாயிருப்பானென்று சொன்னார். அரசனாகிய அமிர்த வசனன் அந்த மாங்கனியைத்தனது மனைவியின் கையிற்றந்து காதலி இக்கனியை ஓர்மஹான் எனக்குத்தந்தனர். இதனைபுசித்தால் புத்திர சந்தானங் கிடைக்குமென்று சொன்னதோடு அம்மஹான்புகன்றவை யனைத்தும் விபரமாய்ச்சொன்னான். இராணி மனமகிழ்ந்து கனியை இரண்டு கையினாலும் வாங்கி கண்களிலொற்றிக்கொண்டு மனமகிழ் வாய்ப் புசித்தனள். கருணாகரன் கிருபையால் கர்ப்பவதியாகி தச மதியும் நிறைந்து ஓர்சுபதினத்தில் கோடிசூரியப் பிரகாசம்போன்ற ஆண்குழந்தையை ஈன்றாள். அருகிலிருந்த தாதியர் ஆனந்தமாய் அரண்மனையில் வந்து இராஜசமுகம் புகன்றனர். அமிர்தவசனன் மனமகிழ்ந்து சுபசெய்திபுகன்ற தாதிகட்கு வேண்டிய வெகுமதி தந்து அனுப்பிவிட்டு, மந்திரியினால் நகரவாசிகட்கு சர்க்கரைவழங்கி ஆதுலர், அந்தணர், யாசகர்கட்கு அன்னதானம் சொர்ணதானம் வஸ்திரதானமுதலான தானதர்ம பரோபகாரம் புரிந்து மனோல்லாச மாயிருந்தனன்.

இராஜஸ்திரீகள் இரஞ்சிதபூஷணிக்கும் குழந்தைக்கும் மங்கள ஸ்நானஞ்செய்துவைத்து நவரத்தின கசிதமயமாய்த்துலங்கும் ஆடை ஆபரணங்களாற் சிங்காரித்தனர். இராணி இனிதனக்கு யாதொரு கவலையுமில்லையென்று மனமகிழ்ந்திருந்தனள். அந்திப்பொழுதான வுடனே அரண்மனையிற் கொலுகலைந்து சகலரும் அவரவரிருப்பிட

மேகினர். இரஞ்சித பூஷணியும் மஹா சந்தோஷமா யிருந்தனள். தாதிகள் மன்னனுக்கு மைந்தன் பிறந்தானென்று அந்நாளை நந்நா ளாய்க் கொண்டாடினார்கள். அரண்மனையிலுள்ளோரனைவரும் ஆனந் தபரவச மடைந்தவரா யிருந்தனர். அரசன் தனது புத்திரன் கால கணிதஜாதகநேர்மையைக் கவனிக்கவேண்டுமென்று மந்திரியினிடத் திற் புகன்றனன். அவ்வார்த்தையைக் கேள்வியுற்ற மதிவல்லபன் ஓர் சேவகனையனுப்பி ஜோதிடசாஸ்திரி யொருவனை வரவழைப்பா யென்றனுப்பினான். அச்சேவகன் தனது மனதிற்கிசைந்த ஓர்ஜோதி டனை வரவழைத்துக் கொண்டு வந்தனன். அந்தஜோதிடன் மந்திரி யின் முன்வந்து தனந்தான்யம் பகுபுத்ரலாபதீர்க்காயுஸ்ச சுபமஸ்து யென்று ஆசீர்வதித்தனன்.

மந்திரி:—மஹா சந்தோஷம் நமது அரசனுக்கு இத்தினம் ஆண் குழநதை பிறந்திருக்கின்றது அதன் ஜாதகபலனை விபரமாய்ப் புகல்வீர்.

ஜோதிடன்:—சரி அப்படியே குழந்தையின் ஜாதக சாராம்ஸத் தைக்கணித்து காலநிர்ணயத்தின் சுகதுக்கங்களை விபரமாய்ச் சொல்லுகின்றேன் கவனிப்பீர் இந்தக்குழந்தைக்கு சகலசாமர்த்தியமும் இருக்கின்றது ஆனால் இடைக்கிடையே பற்பலவித மாகிய கஷ்ட நஷ்டங்களை யனுபவித்துத் தான் மஹாகீர்த்தி வந்தனாயிருப்பான் இவன்பேர் விவேகானந்தனென் றழைக்க வேண்டும்.

என, புகன்றனன் அருகிலிருந்த அரசன் ஆச்சரியமடைந்து ஜோதிடனுக்கு வேண்டிய வெகுமதிதந்து அனுப்பிவிட்டு புத்திரன் மீது மிகவும் வாஞ்சையுடையவனா யிருந்தனன். விவேகானந்தனை அன்னை தந்தை அன்புடன்வளர்த்து ஐந்து வயதான பிறகு வித்யா சாலையில் விடுத்தனர். விவேகானந்தன் ஆசிரியன் கற்பித்த நீதிசாஸ் திரசாராம்ஸமும், உலகியல்பிற்குரிய நடவடிக்கைகளும் ஒழுங்காய் கற்றுணர்ந்து, இராஜாங்கத்திற்குரிய ஆனை ஏற்றம் குதிரைஏற்றம், ரதசாரத்தியமும், தனுர்வேத சாஸ்திரமும், இன்னும் சொக்கட் டான் பாச்சிகையாடும் பலவித விளையாட்டுவித்தையும், பலபேரிடத் திலும் பற்பலவிதமாய்க் கற்றுணர்ந்திருந்தனன். இவ்விதமாய் பதி னைந்து வயதிற்குள் சகலவித்தையும் கற்றுணர்ந்தனன்.

இவனுடைய வாலிபவயதையும், கல்வியின்திறமும், தீரமும், வல்லமையும் கவனித்த அரசனாகிய அமிர்தவசனன் ஓர்நாள் இராஜ

சபையில் தனது மைந்தன் சமர்த்தை மந்திரியினிடம் புகன்று, இவனுக்கு மணஞ்செய்து மனமகிழ வேண்டுமென்றனன். மந்திரியாகிய மதிவல்லபனும், அவ்விதமேசெய்வது நலமென்றே யானினைக்கின்றேனென்றனன். அரசன் சகல தேசத்தரசருக்கும் தனது புத்திரனுடைய திருவுருவப்படத்தை யனுப்பி இவன் அழகிற்கிசைந்த கன்னிகை வேண்டுமென்று திருகிருபமுமெழுதி தூதுவரிடந் தந்தனுப்பினன்.

இங்ஙனம் இவர்கள் நிலை இத்தகையதா யிருக்கையில் விவேகானந்தன் சிறுபிள்ளை புத்தியினால் சிலசேவகருடனே நந்தவனத்திற் சென்று விளையாடிக் கொண்டிருந்தனன். அங்ஙனம் ஓர் தாசிப்பெண் விவேகானந்தன் அழகைக்கண்டு மனமயங்கி யவனைப்போல அபிநயித்து அவனிடம் வந்து தந்திரமாய்ப்பேசி தனது கண்களால் மயக்கி தனது வீட்டிற்கழைத்துச்சென்று அவனிடம் பலவிதமாகிய மோசதந்திரஞ்செய்து தனது ஆசை நாயகனாக வைத்துக்கொண்டாள். விவேகானந்தனவன் தாசிவீட்டைத் தாய்வீடாய் மதித்து அவளுக்கு வேண்டிய ஆடை ஆபரணாதிகளும் திரவியங்களுங் கொடுத்துக்கொண்டு வந்தனன். இவ்விதமாய் 12-நாளைக்குள்ளாக அரண்மனை திரவியங்கள் அநேகம் அவள் வீட்டிற்போய் சேர்ந்துவிட்டது. இதை சில திருடர்கள்கண்டு இரவுகாலத்தில் யாதொருவருங்காணாமல் வீட்டினுள் நுழைந்து தமக்கிஷ்டமான வரையிலுந் திருடிக்கொண்டு போகையில், மஞ்சத்திற் சயனித்திருந்த இராஜகுமாரன் திடீரென்றெழுந்து இனி இருந்தால் மோசமென கட்டிலை விடுத்துக் கீழேகுதித்து வெளியே ஓடிவந்து கதவைமூடி வெளிபக்கம் தாளிட்டுக்கொண்டு அரண்மனையில்வந்து கொத்தவால், தலையாரிகளை யழைத்துக்கொண்டு தாசிவீட்டிற்சென்று திருடர்களைப் பிடிக்கும்படியாய் திட்டப்படுத்தினான்.

இவன் மஞ்சத்திலிருந்து பூமியிற் குதித்தோடும்போது திருடர்தலைவன் பார்த்துவிட்டு, அடடா அதோ ஓடுகிறவனை வெட்டுவீர் வெட்டுவீரென்று சொல்லிக்கொண்டு கத்தியை எடுத்துக்கொண்டு பின்பற்றி ஓடும்போதே விவேகானந்தன் திட்டென தாளிட்டுக்கொண்டு ஓடிப்போனதினால் திருடர்கள் கதவைத்திறக்கமுடியாமல் உட்புறந்தாளிட்டுக் கொண்டார்கள். திருடர்களின் தலைவன் மற்றவர்கட்குச்சொல்லுகின்றான். சேனைகளே யாம் இப்போது புலிக்கூட்டம் போனி லகப்பட்டுக் கொண்டிருப்பதுபோல தத்தளிக்கின்றோம். இதனால் யாம் விசனப்பட்டால் முடியாது விரத்தனமாகவே விளங்கி

எதிரிகளை ஜெயிக்கும் எத்தனத்தி லிருக்கவேண்டும். மஞ்சத்திலிருந்து குதித்தோடியவன் இலேசானவனல்ல நம்மையெல்லாம் கொல்லும்படியான எமனென்றே மதிக்கவேண்டும் ஆனால் சகலரும் கத்தியைக் கையில் பிடித்துக்கொண்டு தயாராயிருக்கவேண்டும் நம்மைப் பிடிப்பதற்கு வருபவர்கள் கதவைத்திறந்துக்கொண்டு வரமுடியாது வீட்டின்மீதேறி ஓட்டைப்பிரித்துக் கீழேகுதிப்பார். அச்சமயம் யாம் வருபவர்களையெல்லாம் ஒவ்வொருவராய் வெட்டிப்போடுவோமாகில் சகலரும் ஓடிப்போவார்கள் அச்சமயம் யாம் ஒவ்வொருவர் தோள்மீது ஒவ்வொருவராய் நின்று உச்சியிலிருப்பவனை வெளிக்கனுப்பி பின்பக்கத்தின் கதவைத்திறந்துகொண்டு சகலரும் தப்பித்துக்கொண்டு ஓடிப்போவோமென சகலரையும் ஜாக்கிரதையாயிருக்கும்படி சொன்னான் அவர்களும் அவ்விதமே நன்கெனச்சம்மதித்து உயிருக்குத்துணிந்து யுத்தகோலமாய் கத்திகளைப் பளபளவென்று கையில்பிடித்து வெகு ரோஷமா யிருந்தார்கள்.

இங்ஙனம் திருடர்கள் நிலை தீரமானதா யிருக்கையில் விவேகானந்தன் அழைத்துக் கொண்டுவந்த கொத்தவால் தலையாரிகள் கதவைத்திறந்துபார்த்தார். மூடியிருக்கக் கண்டார்கள். ஈதென்ன திருடர்களானவர் கதவைத்திறந்தவுடனே ஓடிப்போவது வழக்கம் அச்சமயம் யாம் அவர்கள் பின்பற்றிசென்று பிடித்துக்கொள்வது தவறினால் வெட்டிப்போடுவது தான் வழக்கம் இவர்களென் உட்பக்கம் தாளிட்டுக்கொண்டார்களென யோசித்தார்கள் விபரம் ஒன்றும் விளங்கவில்லை. அவர்களிலொருவன் வீட்டின்மீதேறி ஓட்டைப்பிரித்துப் பார்த்தனன் திருடர்கள் சகலரும் ஓரேதடவையில் கத்தியைக் கலகலவென தமது இடுப்பிலணிந்திருந்த வஸ்திரத்தில் மறைத்துக்கொண்டு ஒன்றுந்தெரியாதவர்போல உட்கார்ந்திருந்தனர் ஓட்டைப்பிரித்துப்பார்த்த தலையாரி மனமிரண்டு ஐயோ! இவர்களைக் கண்டவுடனே மனந்திகிலாயிருக்கின்றதே நாம்பூமியிற் குதித்தால் சித்ரவதை செய்து விடுவார்களென வாய்குளறிக்கொண்டு பூமியிற்குதித்தனன். மற்றவர்களனைவரும் அவனை விசாரித்து அவர்களும் வீட்டின் மீதேறிப்பார்த்தனர். திருடர்களோவெனின் சமயம் எப்போது வாய்க்குமோவென்று தயாராயிருந்தனர்கள். ஆனால்மேலிருக்கும் தலையாரிகள் பூமியிற் குதிப்பதற்கஞ்சி பயந்தோடினார்கள். விவேகானந்தன் இதற்கெப்படி யோசனையென்று சற்றுநேரம் மவுனமாயிருந்து, அரண்மனையிற்சென்று இராணுவவீரரை அழைத்துக்கொண்டுவந்து

வீட்டைச்சுற்றிலும் நிறுத்திவைத்து எவ்விதமாய் அந்தத்திருடர்
களைப் பிடிப்பதுவென்று யோசித்து, ஓர்கடிதத்தில் திருடர்கட்கு மரி
யாதையுடன் ஓர் நிருபமெழுதி வீட்டின் மேற்புறமாய் போட்டான்.
அது திருடர்கள் முன்பாக விழுந்தமையால் திருடர்தலைவன் அதனை
எடுத்துபார்த்து சகலருக்கும் வாசித்துக் காண்பிக்கிறான், "ஐயா!
சமர்த்தான திருடர்களே வந்தனம்! உங்களுடைய பெருமையை
புகழ்வதற்கு யாவராலுமுடியாது உங்களுக்கு நீங்களே நிகரன்றி
அந்நியரை ஈடுசொல்லமுடியாது உங்களையான் அரண்மனை உத்தி
யோகங்களில் அமர்த்திக்கொள்ள யோசிக்கின்றேன். வருகின்றீரா
அவ்விதமானால் உடனே பதில்கடிதமெழுதி யனுப்புவீரென ஓர்கடி
தமும் பென்சலும் அனுப்பியிருக்கின்றேன்" என்றெழுதியிருந்த
படியே வாசித்தனன்" மற்றதிருடர்களும் கேள்வியுற்று மனமகிழ்ந்
தவராய் சரி அவ்விதமே செய்வோமென்று கடிதமெழுதி யனுப்புவீ
ரென்று சொன்னார்கள் திருடர்தலைவனும் சரிதானென்றுசம்மதித்து
கடிதத்தில் சம்மதமென்று சமாதான செய்தியாக ஐயா! யாங்கள்
வயிற்றுக்கில்லாமல் திருடவந்தோம் தாங்கள் என்மீது கிருபைகூர்
ந்து எவ்விதமாயினும் யாங்கள் ஜீவிப்பதற்கிசைந்த உத்தியோகந்
தருவீராகில் உத்தமமாயிருக்குமென்று கடிதத்தில் எழுதி கயிற்றில்
கட்டிவிட்டான் வீட்டின்மேலிருப்பவர் கயிற்றை வலித்துக்கொண்டு
கடிதத்தை விவேகானந்தனுக்குக் கொடுத்தார்கள் அவன் அதனை
வாங்கிக்கொண்டு வீட்டின்முன் சேனாவீரர்களை யெல்லாம் நிறுத்தி
வைத்து கதவைத்திறந்தனன். வீட்டினுள் இருந்ததிருடர்கள் இனி
பயமில்லையென்பதாக கதவைத்திறந்தனர் வீட்டின்முன்னாலிருக்கும்
சேனாவீரரைப்பார்த்தனர். மனமிரண்டனர் தமது ஆயுதங்களை அவ
ரவர்கள் அணிந்திருந்த வஸ்திரங்களில் மறைத்து வைத்தனர். சகல
ரும் கும்பலாய் வந்துவிட்டனர். சேனாவீரர்விவேகானந்தன் உத்திர
வின்படியே திருடர்களின் ஆயுதங்களையெல்லாம் பிடுங்கிக்கொண்டு,
அவர்களையெல்லாம் நிராதரவாய் நிற்கச்செய்தனர். விவேகானந்தன்
அவர்களைப்பார்த்து சொல்வதாயினன்.

விவேகானந்தன்:—அடா துஷ்டர்களே! திருட்டுக் குணமுள்ள
பிரஷ்டர்களே! சகலரும்பகவானால் சிருஷ்டிக்கப்பட்டு அவரவர்
சக்தியனுசாரம் பொருள்சேகரஞ்செய்து ஜீவிப்பது உலகியல்பு
நீங்கள் பிறர்பொருளை அபகரிக்கும் பேயராயிருந்து அநியாய
மாய் திருடுகின்றீர்களே ஆண்டவன் பொறுப்பாரோ?

திருடன்:—ஐயா! பகவான் ஜகத்தைப்படைத்து ஜீவனைப்படைத்தார். ஜீவனுக்கு வயிறென்னும் ஓர் தோற்பையை உண்டாக்கினார். அந்தவயிற்றுக்காக பலவிதமாய்க் கஷ்டப்படச்செய்கிறது, யாங்கள் மாத்திரமல்ல மஹா துறவியாகி கடந்தஞானியாயிருந்த பட்டினத்துச்சுவாமிகளும் ஓர்காலத்தில் தாம் அனுபவித்த கஷ்டத்தைச் சகியாமல்,

### கட்டளைக் கலித்துறை.

பூணுற்படிக்கல்ல பொன்னுக்குந்தானல்ல பூமிதனைக்
காணும்படிக்கல்ல மங்கையர்க்கல்ல நற்சாக்ஷிக்கல்ல
சேணுங்கடந்த சிவனடிக்கல்ல வென்சிந்தைகெட்டுச்
சாணுவயிற்வளர்க்க வெளியேன்படுந்துயர் சற்றலவே.

என்பதாய்ச் சொல்லிவிட்டார். அந்த வயிற்றுக்குச் சிலசமயம் அதிகமான உணவு கொடுத்து ஒரு வருஷம், அல்லது ஒரு மாதமாவது சும்மாயிருப்பா யென்றாலும் வம்பிற்கெழுந்து வயிற்றுபசியதிகரிக்கச்செய்து துன்பஞ் செய்யுமல்லவோ இதனால் தானே கவிசசக்ரவர்த்தினியாகிய ஔவையாரும் மனம் வெறுத்து,

### வெண்பா.

ஒருநாளுணவை யொழியென்றா லொழியாய்
இருநாளைக்கேலென்றா லேலாய்—ஒருநாளும்
என்னோவறியா யிடும்பைகூ றென்வயிறே
உன்னோடு வாழ்தலரிது.

என்பதாய் பாடியிருக்கின்றார். இத்தகைய வயிற்றின் பசியினால்தான் பலவிதமாகிய கஷ்ட நஷ்ட மடைவதற் காச்சுது.

விவேகானந்தன்:—சரி! அவ்விதமானால் செடிவைத்த மனிதன் தண்ணீர் வார்த்து வளர்ப்பதுபோல் பகவான் ஜீவர்களை சிருஷ்டித்து, அவர்கள் ஜீவிப்பதற்கிசைந்த மார்க்கமெல்லாம் காண்பித்திருக்கின்றாரே. அவ்விதமாகிய உத்தமதொழிலிற் பிரவேசித்து பொருள்சேகரித்து பிழைக்கலாகாதா? அன்றியும்,

### வெண்பா.

கன்னுழையாக்காட்டில் நெருங்கற்றவளைக்கும்
உண்ணும்படியறிந்து ஊட்டமெலர்—கண்ணும்
நமக்கும்படியளப்பார் நாரியோர்பாகர்
தமக்குந்தொழிலென்ன தான.

என்னுந் தன்மையாய் சகலஜீவராசிகளுக்கும் பகவான் படியளந்திருக்கும்போது நீ ஏன் திருடி கஷ்டப்படுவதேன்? பலநாள் திருடினாலும் ஒருநாளைக்கு அகப்பட்டால் அடி உதையோடு அபாயமும் நேரிடுமல்லவோ?

திருடன்:—தாங்கள் சொல்வது உண்மையே என்றாலும்,

வெண்பா.

மானங்குலங்கல்வி வண்மையறிவுடைமை
தானந்தவமுயற்சி தாளாண்மை—தேனின்
கசிவந்தசொல்லியர்தங் காமுறுதல்பத்தும்
பசிவந்திடப் பறந்துபோம்.

என்னுந் தன்மையாய் எத்தகையோருக்கும் உற்றவை தானேயென மொழிந்து இனி யாங்கள் ஜீவிப்பதற்கிசைந்த தொழிலைக் கருட்புரிவீராகில் இந்த திருட்டுத்தொழிலை கனவிலும் நினையோமென்று சொன்னான். விவேகானந்தன் சற்றுநேரம் யோசித்து,

விருத்தம்.

தேனதுநீயில்வீழ்ந்தாற் செத்திடாதெடுத்துப்பேரை
மீனவேகொடுக்கினாலே மெய்யுறக்கொட்டலேபோல்
எளனம்பேசியெங்கும் இடர்செய்யுந்துஷ்டரான
கோளினர்க்குதவிசெய்தால் கொடுமையேபுரிவர்கண்டாய்.

என்னுந் தன்மையாய் துஷ்டர்களாகிய உங்களுக்கு எதாயினும் நன்மை புரிந்து ஜீவிக்கச்செய்தால் சமயம் பார்த்துக் கொண்டேயிருந்து அபாயம் விளைவிப்பீரல்லவோ? ஆகையால் துஷ்டசிநேகம் பிராணசங்கட மாகுமே.

திருடன்:—ஐயனே! தாங்க ளெவ்விதமாய் சந்தேக மெய்தாதீர். தாங்களெங்களுக்கு யாதேனும் ஜீவிக்குந்தொழில் அனுக்கிரகம் புரிவீராகில் யாங்கள் குரூரகுணத்தை அருகிற்சேர்க்காமல் ஜீவித்திருப்போம்.

என, பரிதாபமாய்ப் புகன்றனன். விவேகானந்தன் தனது அறிவிற் கெட்டியவிதமே ஆலோசனை புரிந்து, அவர்களிடமிருந்த ஆயுதங்களையெல்லாம் பிடுங்கிக்கொண்டு, அரண்மனையைச் சார்ந்ததோட்டத்தில் பயிரிடும் வேலைசெய்து ஜீவிக்கும்படியாக வேண்டிய காணி பூமிகளைகொடுத்து இவர்களை துணையாய் வைத்துக்கொண்டு பயிரிட்டு ஜீவிப்பீர்களென்று சொல்லிவிட்டு சேனவீரர் தலையாரி முத

ளானவர்களை யெல்லாம் அரண்மனைக் கனுப்பிவிட்டு, தானும் போயினான். அரசன் மந்திரி முதலானோர் இவனுக்கு நேரிட்ட அபாயத்திலிருந்து தப்பித்துக் கொண்ட தற்குரிய புத்திசாதுர்ய விவேகத்திற்காக மெச்சிக்கொண்டார். அச்சமயம் அருகிலிருந்த மந்திரி வினவுதலாயினான்.

மதிவல்லபன்:—இராஜபுத்திரா! யாதுகாரணமாய் அத்தகைய விபரீத கொடுவழக் குண்டாயின? எங்களுக் கிதனுண்மை விபரமாய்த் தெரிவிப்பீர்.

விவேகானந்தன்:—அறிவிற்சிறந்த அமைச்சா! சகலமும் தெரிந்த பெரியோர்கள் முன்னிலையில் அறியாதவன் என்ன சொல்வேன் "உள்ளிய தெள்ளியராயினும் சூழ்வினைப் பையனுழையும்" என்பதுபோல, எத்தகைய உத்தமர்கட்கும் சூழ்வினை யொருபுரட்டு புரட்டிவிடு மல்லவோ?

மதிவல்லபன்:—மதியைத் துணைகொண்டிருந்தால் மாற்றலரணுகான், மறலியும் நெருங்கான். அறிவை அப்புறப் படுத்தினால் அபாயந்தானே. அன்றியும்,

விருத்தம்.

கைப்பொருளெல்லா மழியமுடன்புக்கினம்
    கண்களிக்க உறவினர்க்கும் கண்டபேர்க்கும்
செப்பரியகதைக்கிடமாம் பாபமாகும்
    செய்தொழிலுக்கிசைகேடும் சிலர்க்குக்கோபம்
இப்படியேபரத்தையர்த னின்பமெல்லாம்
    இமைப்பொழுதுமவருடனே யிணங்கலாமோ
மைப்பரவுங்கண்டத்தா னெம்பிரானை
    மறைக்காட்டிலம்மானை வணங்குவீரே.

என்பதை யனுசரித்திருந்தால் எள்ளளவுங் கஷ்டம் வராமல் உலகிற் ஜீவித்திருப்பதற்காகும் யென மதிவல்லபன் ஓர் சார்பாய்ப் புகன்றதை கவனித்த விவேகானந்தன் நாணத்துடன் தலை இறங்கிக் கொண்டு அடடா நமது குற்றத்தை மந்திரி கவனித்து நமக்கும் நீதி சாஸ்திர சாராம்சை கதானுபவமாக பாடிக்காண்பித்தாரென மதித்து மனவிசார முடையவனு யிருந்தனன். இவன் மனக் குறிப்பை யுணர்ந்த அரசன் புத்திரனுடைய புத்தி சாதுர்யத்தையும் மந்திரியினுடைய ஆழ்ந்த யோசனையையும் கவனித்து ஆச்சரிய முடையவனாய் மனமகிழ்ந்திருந்தனன்.

இங்ஙனம் இவர்கள் நிலை இத்தகையதாயிருக்கையில் முன்னம் விவேகானந்தன் திருவுருவம் படமும் திருமண சுபசெய்தி நிருபமும் பலதேசத்திலும் அனுப்பியிருந்ததினால், கேகய தேசத்தின் அரசனுடைய புத்திரியாகிய குணரத்னம், தான் விவேகானந்தன் மீது விருப்பங் கொண்டிருப்பதைப் புகன்றனள். அவள் தந்தையும் சம்மதித்து அமிர்தவசனுக்குக் கடிதமெழுதி தூதுவர் மூலமாய்த் தெரிவித்தனன். அவ்விரண்டு மன்னருஞ் சம்மதித்துக் கொண்டமையால், விவேகானந்தன் தனது தாய்தந்தை பந்துஜன மித்திரா சஹிதமாய்க் கேகய தேசத்திற்குப் பிரயாணமாயினன்.

## Scene 2.

இடம் — கேகயதேசம்

### கதாநாயகர்.

| | |
|---|---|
| அரசன் | அழகானந்தன் |
| மந்திரி | குணசீலன் |
| இராஜபுத்திரி | குணரத்னம். |

அமிர்தவசனன் விவேகானந்தன் மாயராக்ஷதன்.

இங்ஙனம் இவ்விதமாயிருக்கையில் கேகயதேசமன்னன் தனது தேசத்தை வெகுவாய்ச் சிங்காரித்து வைக்கும்படியாய் நகரவாசிகட்கு ஆக்ஞாபித்திருந்தமையால் குடிபடைகள் அங்ஙனே நன்றாய் மதித்து, ஒவ்வொரு வீதியிலும் மகரதோரணங்கள் மாவிலை தோரணங்களும் கட்டி சிற்சில ஸ்தானங்களில் புஷ்பபந்தல்களும் ஜோடித்திருந்தனர். சிற்சில பாகங்களில் நடனகச்சேரி, நாட்டிய கச்சேரி, ஆட்டகச்சேரி, பாட்டு கச்சேரிகளும் செய்துகொண்டு வெகு வேடிக்கையாயிருந்தனர். இவ்விதமாய் ஐந்துநாள் வரையிலும் கேகயதேசம் இந்திரபுரியைப்போற் சிங்காரமாயிருந்தன. அந்நகரத்தரசன், மந்திரி பிரதானியருடன் அமிர்தவசனன் வருகையைக் குறித்து அன்பாய்ப் பேசிக்கொண்டிருந்தனன்.

அச்சமயம் ஓர் தூதுவன் ஓடிவந்து அரசே! யாவரோ வேற்றரசர் படையெடுத்து வந்ததுபோற் காண்கிறதென்றான். அரசன் அலங்கத்தின் மீதேறிப்பார்த்து தனது மந்திரி பிரதானியரால் சேனைகளை தயார்படுத்தி சகலரும் யுத்தசன்னத்தரா யிருந்தனர். விவாஹ

சுபமுகூர்த்தத்திற்காகவந்த அமிர்தவசனன், விவேகானந்தன், மதிவல்லபன் முதலானோர் தமது சேனாவீரருடன் கேகயதேசத்தில் வந்து அந்நகருக் கருகாமையிலிருக்கும் நந்தவனத்தில் வந்து கூடாரமியற்றி சேனைகளனைவரையும் வீற்றிருக்கச் செய்து தனது வருகையை ஒரு கடிதத்திலெழுதி ஓர் தூதுவனிடம் தந்தனுப்பினான். அத்தூதவன் அரண்மனையில் வந்து அரசனைப்பணிந்து கடிதத்தைக் கொடுத்தனன் அழகானந்தன் அந்த ரூபத்தைக்கண்டு மந்திரியினிடம் யோசிக்கலாயினன்.

அழகானந்தன்:—மந்திரி நமது தேசத்தில் வந்திருப்பவர் அமிர்தவசன மஹாராஜன் தனது புத்திரனுடனே சேனாசைன்யத்துடனே வந்திருக்கின்றார். இனி இதற்கென்ன ஆலோசனை?

குணசீலன்:—ஆ! அதற்கென்ன யாம் இச்சமயமே சென்று அவரை எதிர்கொண் டழைத்துக்கொண்டு வருவோம்.

என, புகன்றவை வினவிய அழகானந்த மன்னன் மனமகிழ்வுடனே தனது மந்திரி பிரதானியருடனே அரண்மனையை விடுத்து நந்தவனத்தில் வந்தனர். அமிர்தவசனன் தனது மந்திரி பிரதானியருடனே எழுந்து ஒருவர்க்கொருவர் ஆலிங்கனஞ் செய்துக்கொண்டார்கள். சற்றுநேரம் அன்பாயப் பேசிக்கொண்டிருந்தனர். பிறகு அழகானந்தன் அமிர்தவசனன் முதலானோரை அழைத்துக்கொண்டு அரண்மனையில் வந்தனன். சற்றுநேரம் அவரவர்கள் க்ஷேமங்களை அன்பாய்ப் பேசியிருந்து, கலியாண விஷயத்தையும் பேசிக்கொண்டிருந்து அரண்மனைப் புரோகிதனால் முகூர்த்தநாள் நிர்மானஞ் செய்துக்கொண்டனர் குணசீலன் சிற்பசாஸ்திரிகளை வரவழைத்து விவாஹமண்டபம் வெகு விநோதமாய் ஜோடித்தனர். புரோகிதன் சொன்னவிதமே விவாஹசுபமுகூர்த்தநாளில் விவேகானந்தனுக்கும், குணரத்னத்திற்கும் மங்களஸ்நானஞ் செய்துவைத்து ஆடை ஆபரணங்களாற் சிங்காரித்து மணவறையி லுட்காரவைத்து மங்கிலிய ஸ்திரீகளால் லைங்கனித்து வேதவேதியரக்ஷதைத்தூவ சுபீபவாவென்றனைவரும் ஆசிர்வதிக்கவும் விவேகானந்தன் குணரத்னத்தின் கழுத்தில் மங்கிலியஞ் சூட்டி மனமகிழ்ந்தனன்.

அப்பால் வந்த விருந்தினரனைவரும் அறுசுவை பதார்த்த திவ்யான்ன சுகபோஜன நல்விருந்தருந்திவிட்டு அழகானந்தனிடம் விடைபெற்று கேகயதேசத்தை விடுத்து அவரவரிருப்பிடம் போயினர்.

அப்பால் விவேகானந்தனும் குணரத்னமும் மனமகிழ்வாய் மருவி சுகித்து மனோல்லாசமாய் வாழ்ந்திருந்தனன் ஓர்நாள் குணரத்னம் தமது மணாளனைப்பார்த்து சொல்வதாயினள்.

குணரத்னம்:—பிராணபதி! யாம் நாளைய தினம் நந்தவனஞ் சுற்றி பார்த்துக்கொண்டு வருவோமென்று என்மன மிசைகிறது தமது திருவுள மிரங்கவேண்டும்.

விவேகானந்தன்:—காதலி! உனது இஷ்டப்படியே யானுஞ் சம்மதித்தேன் உன்னிஷ்டப்படியே செல்வோம்.

என, புகன்று இருவரும் அன்றிரவில் தமது சுகத்திற் கிசைந்த மனோல்லாசமாயிருந்து, சயனித்து விழித்தெழுந்து, அருணோதய மானபிறகு, ஸ்நானபான நேமநிஷ்டை முடித்துக்கொண்டு பலகார பக்ஷணம் புசித்துவிட்டு ஆடை ஆபரண சிங்கார அலங்காரமாய் விவேகானந்தனும் குணரத்னமும் அழகானந்த முகவசீகரமாய் பாங்கியருடன் சேர்ந்து நந்தவனத்திற்சென்று சற்றுநேரம் விளையாடிக் கொண்டிருந்தனர்.

விவேகானந்தன்:—காதலி! அதோ பார்த்தனையா இரண்டு மான் குட்டிகள் என்னமாய் விளையாடிக் கொண்டிருக்கிறது அவைக ளுடைய அன்பை கவனித்தனையா?

குணரத்னம்:—ஆம் ஆம் பிராணபதி! அந்தக்குட்டிகளை பிடித்து தரு வீராகில் வீட்டிற்கொண்டுபோய் விளையாடிக்கொண்டிருப்பதற் காகும்.

விவேகானந்தன்:—பெண்ணே! அந்த ஆசைவையாதே. அவை களின் தாய்வந்து பார்த்தால் விசனப்படும். அதுசரியல்ல நாம் வந்து வெகு நேரமாச்சுது வீட்டுக்குச் செல்வோம் வருவாய்.

குணரத்னம்:—பிராணபதி! ஏனிவ்வளவு அவசரப்படுகிறீர். மெது வாய்ப் போகலாமே.

என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே ஓர் மாயராக்ஷதன் திடீ லென்று ஓடிவந்து, குணரத்னத்தை எடுத்துக்கொண்டு ஓடிப்போயி னன். விவேகானந்தன் விதிவசமேயென்று பூமியில் வீழ்ந்து மூர்ச் சையானான் அம்மார்க்கமே போய்க்கொண்டிருந்த சந்நியாசியொருவர் அவனை திடப்படுத்தி களையாற்றி சகலமும் அவனால் சொல்லக் கேட்டு, எழுகூழாங்கல்லை மந்திரித்துக்கொடுத்து, இதை இராக்ஷத னிருக்கும் கோட்டையிற் போடுவாயாகில் அங்குசில அற்புதங்கள்

தோற்றும் அதைக்கண்டு பயப்படாமல் குகையிற்சென்று அவன் உயிர் நிலையறிந்து கொன்றுவிட்டு உனது மனையாளை அழைத்துக் கொண்டு வருவாயென்று சொல்லிவிட்டுப் போயினர். விவேகானந் தன் மனமகிழ்ந்து அருகிலிருந்த தாதிப்பெண்களை அரண்மனைக் கனுப்பிவிட்டு, தான் சந்நியாசி சொன்ன மார்க்கமாகவே சென்று மனையாளாகிய குணரத்னத்தை யழைத்துக்கொண்டு வருவதற்காக ஆரண்ய மார்க்கமாகவே செல்வதாயினன். தாதிப்பெண்க ளனைவரும் அரண்மனையில் வந்தனர்.

அரண்மனையில் வந்த கன்னியர் மனவிசாரமாயிருந்தனர். அச் சமயம், இராணி ஆச்சரியமடைந்து பெண்காள் உம்முடன் வந்த எனது புத்திரி யெங்குசென்றனளென வினவினள். தோழிப்பெண் கள் நடந்தவையனைத்தும் விபரமாய்ப் புகன்றனர் குணவதி கேள்வி யுற்று, ஆ! மகளே! யுன்னை அசுரனெடுத்துச் செல்லும்போது உன தாவி எவ்விதந் துடித்ததோவென மனங் கசந்தழுதனள். அருகி லிருந்தோ ரனைவரும் ஓடிவந்து யாதென விசாரித்தனர். குணவதி தாதிகள் புகன்றவையனைத்தும் புகன்று மகளை யுயிருடன் பிரிந்தே னென்று கண்ணீர்த்ததும்பக் கதறியழுதனள். இராணிமாளிகையில் இத்தகையதாய் அழுகுரல் கூச்சல் கேட்டதைக்கவனித்த அரசன் முதலானோ ரோடிவந்து யாதென விசாரித்தனர். நடந்தவை யனைத் துங் கேள்வியுற்றனர். இனி இதற்கென்ன யோசனையென்று சற்று நேரம் ஆலோசித்தனர். ஆனால் குணரத்தினத்தின் தந்தையாகிய அழகானந்தனுக்கு மனந்தாளாமல் விசனித்தனன் மந்திரி பலவித தைரியவார்த்தைப் புகன்றனன்.

அழகானந்தன்:—மந்திரி! இனி காலதாமதஞ் செய்வது நன்கல்ல. நமது அரண்மனை ஜோதிடனை வரவழைப்பீர்.

மந்திரி:—இதோ வந்தனர்.

அழகானந்தன்:—ஜோதிடரே இராஜபுத்திரியின் காலகணிதத்தை விபரமாய்ப் புகல்வீர்.

ஜோதிடன்:—அரசே! உமது புத்திரியாகிய குணரத்னத்திற்கு இன் னும் ஒரு மாதகாலம் வரையிலும் மலைக்குகையில் சிறைபட் டிருக்கும்படியாய் நேரிடும், பின்பு சிலகாலம் வரையிலும் மஹா சாமர்த்தியஞ்செய்து தனது மணாளனுடனே இங்ஙனம் வரு வதற்காகும் இதைப்பற்றி தாங்கள் யாதொரு மனக்கவலையு மெய்தாதிர்.

என புகன்றனன், அரசன் ஒருவாறு மனந்தேறி யிருந்தனன். இவ்விஷயத்தை விவேகானந்தன் தந்தையாகிய அமிர்த வசனன் கேள்வியுற்று, அவனும் பலவிதமாய் மனசசஞ்சலமடைந்து ஜோதிடர்களால் விவேகானந்தன் காலநிலைமையைத் தெரிந்துகொண்டு ஒருவாறு மனந்தேறி யிருந்தனன்.

## Scene 3.

இடம் ஆரண்யம்

### கதா நாயகர்

விவேகானந்தன்:—சந்நியாசி, குணரத்னம், இராக்ஷதன்.

இங்ஙனம் இவர்கள் நிலை இவ்விதமாயிருக்கையில், முன்னம் மாயராக்ஷதன் குணரத்னத்தை யெடுத்துக் கொண்டுபோய் தான் வாசஞ்செய்யும்படியான குகையில் வைத்துக்கொண்டு அவளை புசிப்பதற்கு மனமில்லாமல் அவளுடைய அழகைக்கண்டு மனமயங்கி அன்பாய் பதுமையைப்போல நேத்திரானந்தமாய்ப் பார்த்துக்கொண்டிருந்தனன். ஆனால், தான்மாத்திரம் தனது பக்ஷணத்திற் கிசைந்ததையாகிய மிருகங்களைப் பிடித்துத்தின்று, அவை ஜீரணிப்பதற்கிசைந்த கடல்நீரைக் குடித்துவிட்டு குணரத்தினத்திற்கு வேண்டிய காய்கனிகளை கொண்டுவந்து கொடுத்துக் கொண்டிருப்பான். குணரத்னம் அந்தக் காய்கனிகளைப்புசித்து சுனைநீருந்தி தபசியைப்போல சதா பகவத்பக்தியானந்தமா யிருந்தனள். சிலசமயம் இராக்ஷதனுக்கு நரமாம்ஸபக்ஷணம் வேண்டியதாயிருந்தால், மனிதசஞ்சார கானகத்திற்சென்று வழிப்போக்கர்களை யெல்லாம் பிடித்துக்கொண்டு வந்து குகையருகிலிருக்கும் விருக்ஷத்தில் இருப்புச் சங்கிலிகளாற் பிணைத்துக்கட்டி வைத்திருந்து, தனக்கு வேண்டும்போது அந்தமனிதர்களை கையிலெடுத்து வெள்ளரிக் காயைப்போல் கடித்துக்கடித்து மிகவும் இனிமையாகப் புசிப்பான், அவர்கள் குய்யோ முறையோவெனக் கூச்சலிட்டுக் கதறியழுரும்போது குணரத்னம் மனமிரண்டு திகிலடைந்து துடித்து மூர்ச்சையாய் விடுவாள். அச்சமயம் மிருகத்தைப்போன்ற விகாரகுணமமைந்த இராக்ஷதன் பரிதாபமடைந்து குணரத்னத்தை யெடுத்து உட்காரவைத்து மூர்ச்சை தெளியும்படியாய்க் களையாற்றி கனிகாய்களைப் புசிக்கச்செய்வான். இவ்விதமாய் குணரத்தினத்தின்கதி அபாய நிலையாகவே யிருந்தது.

இங்ஙனம் இத்தகைய அற்புத ஆனந்த ஆச்சரிய காக்ஷியாயிருக்கையில், விவேகானந்தனானவன் தனது கண்முன்னே குணரத்னத்தை இராக்ஷதன் எடுத்துக்கொண்டு போனானேயென்று மனவிசாரமடைந்தவனாய் அவனை இனி சும்மாய்விடுவதில்லை என்னையும் அவன் மென்றுதின்று விட்டாலும் சரி! குணரத்னத்தை பிரிந்து உயிர்பிழைத்திருப்பதில்லையென்று மனவைராக்யமாய்த் தனுசைக்கரத்திலேந்தி வனவாசியாய்ப் போய்க்கொண்டிருந்தனன். இரவுகாலத்தில் மிருகசஞ்சாரமாயிருப்பதைப்பற்றி மனவிசாரமடைந்தவனாய், அதியாயமாய் ஆவி இழப்பதிலும் குணரத்னத்தை எடுத்துச்சென்ற இராக்ஷதனுடனெதிர்த்து அவன் வாய்ப்பக்ஷணமாவதே சிரேஷ்டமென மதித்து இரவுகாலத்தில் விருக்ஷங்களின் கிளைமீதமர்ந்து சயனித்திருப்பதும், பகற்காலத்தில் வழிநடப்பதும் பசிவேளைக்கு காய்கனிகளைப்புசித்துப் பசிதணிவதுமாய் பிரயாணமாயிருந்தனன்.

இவ்விதமாய் விவேகானந்தன் வெகுதூரமாய்ச்சென்றும் தான் நாடியகாரியம் நிறைவேறாமலிருந்ததினால் மனவிசாரமடைந்தவனாய்ப் போய்க்கொண்டிருக்கையில், வழியிலெதிருற்ற நந்தவனத்தைக்கண்டு, அங்கிருக்கும் தாமரைப்பொய்கையிலிறங்கி ஸ்நானபான நேமநிஷ்டைபுரிந்து இனிமைசேர் கனிவர்க்கங்களைப் புசித்து நந்நீரருந்திக் களைதெளிந்து குளிர்ந்த வாடை வீசுதற் கினிமை பொருந்திய வசந்த மண்டபத்திற் சற்றுநேரம் உட்கார்ந்திருந்து பலவிதமாய் ஆலோசித்துக் கொண்டிருந்தனன். அங்ஙனம் ஓர் சந்நியாசியும் தனது சிஷ்யவர்க்கத்துடன் வந்திருந்தனர். அவரைக்கண்டவுடனே மனமகிழ்வாய் அவரருகில் வந்து நமஸ்கரித்தனன். அம்மஹான் மனங்களித்து இவன் இல்லறவாசியாயிருக்கின்றானே இவன் யாது காரணமாக இவ்வளவுதூரம் வந்திருக்கின்றானென யோசித்து விவேகானந்தனை விசாரிப்பதாயினர்.

சந்நியாசி:—அப்பா! நீயாது காரணமாக இத்தகைய பயங்கரமான கானகத்தில் தனியாய் வந்திருக்கின்றனை?

விவேகானந்தன்:—சுவாமி! யானும் எனது மனைவியுமாக நந்தவனத்தில் வருகையில் ஓர் மாயராக்ஷதன் வந்து அந்தப் பெண்ணை எடுத்துக்கொண்டு இம்மார்க்கமாய் ஓடிப்போயினன். அவனைத் தேடிக்கொண்டு போகிறேன்.

சந்நியாசி:—அப்பா! பெண்களோ காண்போரிச்சிக்கும் அழகமைந்தவர், அவர்களாசையால் அநேக மனிதர் மரணமெய்தினர்.

அவ்விதமிருக்க, நீ அந்தப்பெண்ணை என் துணையா யழைத்துக் கொண்டு அந்திப்பொழுதில் நந்தவனத்திற் கழைத்துக்கொண்டு வந்தனை அழகான பெண்ணால் ஆவிக்கபாயமென்ப தறியா யில்லையா? அன்றியும், இப்போது நீ தேடிக்கொண்டு போனா லென்ன செய்வாய்?

விவேகானந்தன்:—சுவாமி! யான்மாத்திரம் அவனைக் காண்பேனாகில் எனது அஸ்திரத்தினாலவனை சித்ரவதைசெய்து என் கோபத் தைத் தணிவேன்.

சந்நியாசி:—சரி! அப்படியானாலும் அவன் இராக்ஷதன், நீ மனிதன் இருவரும் ஒருவரோ டொருவர் எதிர்த்தமர் பொருந்திடில் உன்னை அவன் கரும்புபோல மென்று தின்று விட்டாலென்ன செய்வாய் முதலுக்கே மோசமாய் விடுமே.

விவேகானந்தன்:—சுவாமி! அதர்மம் தர்மத்தை வெல்லாது அவ்வித மாய் அந்த ராக்ஷதன் எவ்வளவு சமர்த்துடை யவனானாலும் என்னை ஜெயிக்கமுடியாது. அன்றியும் மஹான்கள் தரிசனம் அபாய விமோசன மென்பதுபோல உமது தரிசனங்கண்ட எனக்கு யாதொரு அபாயமுமில்லாமல் இராக்ஷதனை ஜெயித்து எனது பத்தினியை அழைத்துக்கொண்டு போவேன்.

சந்நியாசி:—அப்பா! நீ இவ்வளவு உண்மையான நற்குணம் விளங்கி யவனாகையால் உனக்கு ஒருபோதும் அபாயம் வராது உன் இஷ்டப்படியே நீ அசுரனை ஜெயித்து உனது பத்தினியை அழைத்துக்கொண்டு போவாய், ஆனால் யான் உனக்கு ஓர் யோசனை சொல்கின்றேன் அவ்விதமே செய்வாயாகில் நீ ஜெயம் பெறுவாய்.

விவேகானந்தன்:—சுவாமி! தமது அனுக்கிரகப்படியே நடந்துகொள் வேன் உபதேசித் தருள்வீர்.

சந்நியாசி:—அப்பா! நீயோமனிதன் அவனோ மாயராக்ஷதன் அவன் மந்திரவலிமையிற் சிறந்தவன் தனது உயிரைதேகத்தில் வைத் திருக்க மாட்டான் வேறு எங்கனமேனும் மறைத்து வைத் திருப்பான். அந்த விபரம் தெரியாமல் நீ அவனிடத்தில் சண் டைசெய்தால் அவனை ஜெயிக்கமுடியாது. ஆகையால் நீ இதோ வழியாய் இரவும் பகலுமாய் பதினைந்து நாட்சென்றால் வழியில் ஓர் பெரியமலை தோன்றும், அந்தமலை யடிவாரத்தில் ஓர்குகை

யிருக்கின்றது, அங்ஙனம்சென்று உனது மனையாளைக்கண்டு அவளால் இராக்ஷதன் உயிர்நிலையைத் தெரிந்துகொண்டு அவனுக்குத் தெரியாமல் அவன் உயிர்நிலை யிருக்குமிடத்திற்போய் அவனைக் கொன்றுவிட்டு வரவேண்டும்.

என, சொல்லிவிட்டு தமது சிஷ்யர்களுடனே போய்விட்டனர். அப்பால் விவேகானந்தன் மனமகிழ் வெய்தியவனாய் கரத்திற்றனுசேந்தி கானகமார்க்கமாய்ச் செல்வதாயினன். இவ்விதமாய்ப்போய்க் கொண்டிருக்கையில் வழியிலோர் ஆலமரம் தோன்றியது அதன் உச்சியில் நின்று பார்த்தான். ஒருமைல் தூரத்தில் ஓர் பெரியமலை காணப்பட்டது. அதனால் அவன் மகிழ்ந்து இனி நமது எண்ணம் கைகூடி விட்டதெனமதித்து, அம்மரத்தை விடுத்திறங்கி தான் கண்ணுற்ற மார்க்கமாகவே வந்துக்கொண்டிருந்தனன். அங்ஙனம் வழியிலெதிருற்ற சுனையில் குணரத்னம் ஸ்நானஞ்செய்து வஸ்திரத்தை யுடுத்திக்கொண்டு மலையருகில் போய்க்கொண் டிருந்தனள்.

அச்சமயம் விவேகானந்தன் கண்டு பெண்ணே! யானிதோ வந்து விட்டேனென்றான். குணரத்னம் திடுக்கிட்டு ஆ! பிராணபதி! யான் இத்தனைநாளாய் மனவிசாரமா யிருந்தேன். இப்போது உமது முகதரிசனங் கண்டவுடனே எனது மனவிசாரம் பறந்து போச்சது வருவீர் தீவிரமாய் ஓடிப்போவோ மென்றனள். விவேகானந்தன் சிரித்து, பெண்ணே! அவனோ இராக்ஷதன் அவனை உயிருடனே விட்டுவிட்டு யாம் ஓடிப்போனால் பின்னால் வந்து நம்மைக்கொன்று விட்டாலென்ன செய்கிறது. ஆகையால் கொடிய பாம்பைக்கொன்று கொளுத்தி விடுவதுபோல அந்த ராக்ஷதனைக் கொன்று விட்டுப் போமென்றான். குணரத்னம் மனந்திகைத்து பிராணபதி! அந்த ராக்ஷதனோ மனிதரைத்தின்னும் மாபாவியா யிருக்கின்றான். அவன் முன்சென்றால் அபாயமாகு மென்றாள். அப்போது விவேகானந்தனுக்கு சந்நியாசி சொன்னவார்த்தை ஞாபகத்தில் வந்து பெண்ணே! நீ இராக்ஷதன் வந்தவுடனே அவனுடைய உயிர் நிலையைக் கேட்டு தெரிந்துக் கொள்வாயானால் யானவனை எளிதிற் கொன்றுவிட்டு உன்னையும் அழைத்துக்கொண்டு போவேனென்றான். குணரத்னம் அவ்விதமே நன்கெனச் சம்மதித்துக்கொண்டு தனது வாசஸ்தானமாகிய குகையிற் போயிருந்தனள். விவேகானந்தன் அங்கிருக்கும் ஓர் ஆலவிருக்ஷத்தின் கிளை மீதேறி இலை மறைவில் மறைந்திருந் தனன்.

இங்ஙனம் இவர்கள் நினைவு இத்தகைய அற்புத ஆச்சரியகாரணி யாயிருக்கையில் மாயராக்ஷதன் தனது வழக்கப்படியே வனமிருகங் களைப் புசித்துவிட்டு கடல்நீரைக்குடித்துப் பசிதணிந்து குணரத்னத் திற்காக வேண்டிய காய்கனிகளைப் பறித்துக்கொண்டு தனது வாசஸ் தானமாகிய குகையில் வந்தனன். இவன் வருகையை விருக்ஷத்தின் மீதிலிருந்து பார்த்துக்கொண்டிருந்த விவேகானந்தன் மனபயங்கர முடையவனாய் இனி இவனை எவ்விதமாய்க் கொல்வதென்று ஆலோ சித்துக்கொண்டிருந்தனன். இராக்ஷதன் கொண்டுவந்த காய்கனிகளை குணரத்னத்திற்குக் கொடுத்தனன். அவள் அதனை அருந்தாமல் மன விசார முடையவளைப்போல பரிதாபமாய்ச் சொல்வதாயினள்.

குணரத்னம்:—ஐயா! எனது தாயினுஞ்சிறந்த தயாளகுணம் பொருந் திய தாங்கள் இத்தனை நாளாய் எனக்கு இனிமைசேர் கனிவர்க் கங்களைப் பறித்துக் கொண்டுவந்து கொடுக்கின்றீர் உமக்குப் பின்னால் இந்தக் கானகத்தில் யாரெனக்குத் துணையாகும் அன் றியும் இந்த பயங்கரமான கானகத்தில் யாதொரு துணையுமில் லாம லிருக்கின்றேனே. இவ்விஷயத்தை நினைக்குந்தோறும் எனக்கு மிகவும் விசனமாயிருக்கிறது.

இராக்ஷதன்:—பெண்ணே! இதைக்குறித்து நீ விசனப்படாதே யான் சதாகாலமும் சுகஜீவியாகவே யிருப்பேன்.

குணரத்னம்:—உயிரிருக்கும் வரையில் தானே சுகஜீவியாயிருப்பீர், உயிர்போனாலென்ன செய்கிறது.

இராக்ஷதன்:—(சிரித்து) பெண்ணே! எமனும் எனைக்கண்டால் மன மிரளுவானெனின் எவ்விதமாய் யான் மரணமாவது?

குணரத்னம்:—ஈதென்ன ஆச்சரியம்! வல்லவனுக்கு வல்லவன் வையகத்திலுண்டு என்னுந்தன்மையாய் உலகிற்பிறந்தபோதே ஒருவனைக்கொல்ல மற்றொருவ னிருக்கின்றான். அவ்விதமிருக்க தாங்களோ கானகஞ்சென்றால் இரண்டுமூன்றுநாள் பொறுத்து வருகின்றீர். அச்சமயம் யாவராயினும் உம்மைக் கொன்று விட்டாலென்ன செய்கிறது.

இராக்ஷதன்:—பெண்ணே! எத்தகைய விராதி வீரனானாலும் என்னை ஜெயிப்பதற்கு முடியாது! அஃதெவ்விதமெனில் உலகிலிருக் கும் சகல ஜீவர்களும் தன்னுயிரை தனது கழுத்தினில் வைத்

துக்கொண்டிருப்பான். அப்போது பகைஞர்கள் எதிர்த்து சண்டைசெய்து கொன்றுபோடுவார்கள். ஆனால் என்னை அவ்விதமாய்க் கொள்வதற்கு முடியாது.

குணரத்னம்:—ஈதென்ன ஆச்சரியம்? எத்தகைய ஜீவர்கட்கும் ஆவி * யாக்கையி லிருக்கு மல்லவோ? உமக்குமாத்திரம் இல்லாமலிருந்தால் உலகிலெவ்விதமாய் உலாவுகின்றீர்.

இராக்ஷதன்:—பெண்ணே! எனது உயிரை ஓர் பெட்டியில் அடக்கஞ் செய்திருக்கின்றேன் கவனிப்பாய்.

என்று, குகையிலிருக்கும் ஓர் புறத்திற்சென்று அங்ஙனமிருக்கும் கதவைத்திறந்தான் அதற்குள் தகத்தகாயமாய் தங்கப்பிரகாசமான ஓர்பெட்டி காணப்பட்டது அதைத்திறந்த உடனே ஓர் சக்கரஞ் சுழன்று கொண்டிருந்தது. அதைக்கண்ட குணரத்னம் ஆச்சரியமடைந்து ஈதென்ன ஆச்சரியம், யாதொரு ஆதாரமுமின்றி சுழலுகிறதேயென்று சிரித்தனள். இராக்ஷதன் மர்மமுணராமல் பெண்ணே! இதுதான் எனது உயிர் எப்போது இந்தச்சக்கரம் சுழலாமல் நின்று விடுகிறதோ அப்போதுதான் எனது உயிர் நீங்குமென்று சொன்னான். அதையுணர்ந்த குணரத்னமும் சரிதானென்று சம்மதித்துக் கொண்டு, ஐயனே உமக்கு எக்காலிலும் அபாயமில்லையென யான் நன்குணர்ந்தேன். இனி எனது கஷ்டநஷ்டமும் விலகிப்போனது இனியாலும் சுகஜீவியாயிருப்பதற் காகுமென்று மனமகிழ்வாயிருந்தனள். அசுரன் தான்கொண்டுவந்த காய்கனிகளைக் குணரத்னத்திற்கு கொடுத்தனன். அவள் அதை மிகவும் இனிமையாய்ப் புசித்துவிட்டு இனி இவனை கொல்ல வேணுமென்னும் யெண்ணத்தினால் அவனைப் பார்த்து, ஐயா! யான் அநேககாலாய் அன்னம் புசியாமலிருந்ததினால் தேகம் இளைத்திருக்கின்றது. ஆகையால் மனித சஞ்சாரமுள்ள நகரிற்சென்று அங்ஙனமிருக்கும் மிட்டாய் கடைகளில் தாம்பாளங்களிலிருக்கும் மிட்டாய்களைக்கொண்டு வருவீராகில் புசித்துப் பசி தணிவேனென்றால், இராக்ஷதன் மனமகிழ்ந்து அவ்விதமே நன்கெனச் சம்மதித்து அங்கிருந்து பிரயாணமாகி ஆரண்ய மார்க்கமாகவே நமது மனிதசஞ்சாரமான நகரிற் பிரவேசித்தனன் அங்ஙனமிருப்பவர்கள் இவனைக்கண்டு மனமிரண்டு நாற்புறமுஞ் சிதறி யோடினார்கள்.

* யாக்கை சரீரம்.

அச்சமயம், இராக்ஷதன் ஓர்மிட்டாய் கடையிற்சென்று அங்கிருக்கும் மிட்டாய்களின் வாசனையை முகர்ந்து இனிமையாயிருந்ததினால் அவையனைத்தும் தானே புசித்துவிட்டு மறுபடியும் ஒவ்வொரு மிட்டாய் கடைகளிலும் சென்று மிட்டாய் புசித்துக் கொண்டிருந்தனன்.

இங்ஙனம் இவன்நிலை இத்தகையதாயிருக்கையில் குணரத்னம் இராக்ஷதன் உயிரிருக்கும் விதத்தைக் கவனித்துக் கொண்டிருந்தவளாகையால், மனமகிழ்வாயிருந்தனள். அச்சமயம், விருக்ஷத்தின் மீதிருந்த விவேகானந்தன் மெல்லென இறங்கிவந்து, குணரத்னத்தின் முன்வந்து பெண்ணே! அசுரனுடைய சமாச்சாரமென்னவென்று வினவினன், குணரத்னம் மனமகிழ்ந்து பிராணபதி இங்கே வாருமென்று அழைத்துச்சென்று திடீரென ஓர் கதவைத் திறந்தனள். அங்ஙனம் ஓர் சக்கரம் சுழன்று கொண்டிருந்தது. அதனைக்கண்ட விவேகானந்தன் ஈதென்னவென்றனன், குணரத்னம் புன்னகை புரிந்து பிராணபதி! இதுதான் இராக்ஷதனுடைய உயிர் இதனை நிறுத்திவிட்டால் அந்தராக்ஷதன் மரணமாவான். அச்சமயம் நாம் நமது தேசத்திற்குப் போய்விடுவோமென்றனள். அவ்வார்த்தையைக்கேள்வியுற்ற விவேகானந்தன் இதுஓர் பெரிய காரியமாவென்று ஓர் மரத்தின்கிளையை இலகுவுடனே யொடித்து சக்கரத்தின்மீது மோதியடித்தனன் சக்கரம் சுழலாமல் சுக்கல் சுக்கலாயொடிந்து போனது. அச்சமயம் இராக்ஷதன் ஓர் மிட்டாய்க்கடையில் மிட்டாய் தின்றுகொண்டிருக்கும்போது திடீரெனவிழுந்து மரணமூர்ச்சையாக மெல்லென யெழுந்துபார்த்து கவனித்துணர்ந்து குகையிலிருந்த சக்கரம் ஒடிந்துபோனதினால் குணரத்னம் செய்தமோசத்தை நினைந்து நாம் மரணமாவதற்குள் போய் அந்தப் பெண்ணைக் கடித்துத்தின்றுவிடவேண்டுமென்று கோபத்துடன் ஓடிவரலாயினன். அச்சமயம் விவேகானந்தன் தனுசிற் கணைதொடுத்துத் தயாராயிருந்தபடியால் திடீரென அசுரன்மீது விடுத்தனன். அவன் அம்புபாய்ந்த அதிர்ச்சியினால் திடீரென மூர்ச்சையாய் வீழ்ந்திறந்தனன்.

அச்சமயம் விவேகானந்தனும் குணரத்னமும், அங்கிருந்து பிரயாணமாகி ஆரண்யமார்க்கமாய்ப் போய்க்கொண் டிருந்தனர்கள்.

---

## Scene 4.

இடம் நந்தவனம்

### கதாநாயகர்

விவேகானந்தன், குணரத்னம், சந்நியாசி.

இங்ஙனம் இவ்விதமாய் விவேகானந்தனும் குணரத்னமும் போய்க்கொண் டிருக்கையில் வழியிலேயிருந்த ஓர் நந்தவனத்தைக் கண்டு ஆனந்தங் கொண்டவராய் நமது கஷ்டநஷ்ட கவலையனைத்தும் ஒழிந்துவிட்டதென மனமகிழ்ந்தவராய் அங்ஙனமிருக்கும் தாமரைப் பொய்கையிற் ஸ்நானபான நேமநிஷ்டை யனைத்தும் முடித்துக் கொண்டு அங்ஙனம் அடர்ந்து செழிப்புளதாகிய விருக்ஷங்களிற்காய்த்துக் கனிந்துளதாகிய இனிமைசேர் கனிவர்க்கங்களைப் பறித்துக் கொண்டுவந்து வசந்தமண்டபத்தி லுட்கார்ந்து சதிபதி இருவரும் புசித்துக் களைதெளிந்து சற்றுநேரம் இளைப்பாறுதலாக வசந்தமண்டபத்தி லுட்கார்ந்திருந்தனர்.

அச்சமயத்தில் ஓர் சந்நியாசி அம்மார்க்கமாகவேவந்தனர். அவரைக்கண்டவுடனே விவேகானந்தன் திடீரென் றெழுந்துபோய் அவருடைய திருவடியை பணிந்து சுவாமி எனது மனக்கவலை யகற்றுவீரென்றனன் அம்மஹான் ஆசீர்வதித்து அப்பா! இனியாதும் மனசஞ்சல மெய்தாதேயென்று தைரியவார்த்தையைப்புகன்று தன்னுடனே யழைத்துக்கொண்டு அந்நந்தவனத்தி லுலாவிக் கொண்டிருந்தனர். அச்சமயம் குணவதியும் அவர்களுடனே வருகலாயினள். அம்மஹான் திரும்பிப்பார்த்து சீ! ஈதென்ன மாயையென்று திரும்பினர். அச்சமயம் விவேகானந்தன் சந்நியாசியைப் பணிந்து சுவாமி இவளென்மனையாள் தெய்வபக்தியிற் சிறந்தவள் மஹா உத்தமி! எமது காலவித்தியாசத்தினால் இத்தகைய பயங்கரமான கானகத்தில் வந்து பரதவித்திட லானோமென்று நடந்தவை யனைத்தும் ஆதியோடந்தமாய்ப்புகன்றனன். சந்நியாசி பரிதாபத்துடன் அவர்கள்மீது கருணை வாய்ந்து அப்பா! நீயாதொரு மனவருத்தமு மெய்தாதே! உலகில் பிறந்த மனிதர்கட்கு சுகதுக்கம் வாய்ப்பது உலக வழக்கப்படியேயன்றி நூதனமாய் வந்ததல்ல, அவ்விதமே நீ முன்ஜனனத்திற் செய்த பாபபுண்ணியத் தளவின்படியே சுகதுக்க மநுபவிக்கலானாய். அவற்றில் சுகமநுபவிக்கும்போது மனமகிழ்வதும், துக்கமநுபவிக்

கும்போது துயரப்படுவதும் சரியல்ல ஆனால், நீ! இல்லறவாசியாய் நகரிலிருக்கும்வரையில் சுகவதியாகிய மனையாளுடனிருந்தாய் ஆனால் இப்போது நீ தபசிகள் சூழும் வனத்தில் இவ்வளவு அழகமைந்த பெண்ணை அழைத்துக்கொண்டு வரலாமோ ஆனால் உனது காலவித்தியாசம் இவ்விதமானதால் இதைக்குறித்துப் பேசுவதினாற் பிரயோசனமில்லை. அன்றியும் சில அஞ்ஞானமாய்கையுடைய அவிவேகிகள் வருவாராகில் உங்களிருவருக்கும் பலவிதமாகிய கஷ்ட நஷ்டமாகும், அதிவீரனானாலும் அழகுடையமனையாளால் ஆபத்தாகுமென்பதுணர்கிலாயோ? யென்று சொன்னார் விவேகானந்தன் சற்று யோசித்து சுவாமி தாங்கள் சொன்னவிதமே எனக்குத் தோற்றுகிறது. ஆனால் இவற்றிற் கெவ்விதமென்று வினவினன்.

சந்நியாசி:—அப்பா! நீ இதற்காக மனவிசாரமெய்தாதே யான் இந் தப்பெண்ணை ஆண்பிள்ளையைப்போற் செய்து வருகிறேன்.

விவேகானந்தன்:—தாங்கள் சொல்வதைக் கேட்கும்போதே எனக்கு மிகவும் விசனமாயிருக்கிறது. அஃதெனினும் பகவான்சிருஷ்டியின்படியே பெண்ரூபமாயிருப்பவளை ஆண்பிள்ளை ரூபமாய்ச் செய்துவிட்டால், இருவருப்பிற்கும் உதவாதவளாயிருந்தாலென்னசெய்கிறது தாங்களிதற்கு யாதேனும் ஓர் நல்வழிகாண்பித்து எமது தேசத்திற்குப் போகும்படியாய்ச் செய்குவீர்.

சந்நியாசி:—நீங்கள் மனிதசஞ்சாரமுள்ள தேசத்தில் போவதற்கு ஆறுமாதத்திற்கு அதிகமாய்ச்செல்லும், அத்தனை நாளை வரைக்கும் இவ்வளவு அழகானபெண்ணை தனியாயழைத்துக்கொண்டு போவதிலும் தற்சமயம் யான் இரண்டு மந்திரம் கற்பிக்கின்றேன் அதில் ஒன்றை உச்சரித்தால் புருஷரூபமாகும், மற்றொன்றை உச்சரித்தால் பெண்ரூபமாகும் தற்சமயம் ஆண்பிள்ளை ரூபமாகவே உன்னுடன் நடந்து ஆரண்யத்தைவிடுத்து தேசத்திற்குப் போனபிறகு பெண்மந்திரத்தை உச்சரித்தால் பழைய ரூபமாகிவிடும், இவையனைத்தும் கவனித்து, உனது இஷ்டத்தைத் தெரிவிப்பாய்.

விவேகானந்தன்:—சுவாமி! அவ்விதமே செய்வீர்?

சந்நியாசி:—அம்மா! அருகில் வருவாய்.

குணரத்னம்:—மஹாபாக்யம் சுவாமி.

சந்நியாசி:—அம்மா! யான்சொன்னாலும் யந்திரங்களை மனதில் வசித்துக் கொண்டிருப்பாய்.

குணரத்னம்:—சுவாமி தமது திருவாக்கின் படியே கவனித்துக் கொண்டேன்.

சந்நியாசி:—சரி! இனி நல்லகாலம் வந்ததென் றெண்ணிக்கொண்டு பிரயாணமாய்ச் செல்வீர்கள்.

என, ஆசீர்வதித்து விட்டுப்போயினர் அச்சமயம், விவேகானந்தன் குணரத்னத்தைப் பார்த்து சிரித்தனன்.

குணரத்னம்:—பிராணபதி! தாங்கள் சிரித்த காரணமென்ன?

விவேகானந்தன்:—தற்சமயம் நீயும் என்னைப்போல ஆண்பிள்ளையாயிருக்கின்றனையே. நாமிருவரும், என்ன முறைகொண்டு பேசுவது?

குணரத்னம்:—பிராணபதி! யான் ஆண்பிள்ளை ரூபமாயிருக்கும் வரையினும் அத்தானும், மைத்துனனுமாய் முறைகொண்டு பேசுவோம், ஸ்திரீவேஷமானால் பழையபடியே சதிபதியாயிருப்போம்.

விவேகானந்தன்:—சரி! ஸ்திரீ மந்திரத்தை உச்சரி பார்ப்போம்.

என, பகர்ந்ததை வினவிய குணரத்தினமும் சரியென சம்மதித்துக்கொண்டு, ஸ்திரீமந்திரத்தை உச்சரித்தாள். இமைநேரபழைய ரூபமாகிய பெண்வடிவமானாள். மறுபடியும் புருஷமந்திரத்தை உச்சரித்தனள் ஆண்பிள்ளை வடிவமானாள். இவ்விதமே நாலைந்துதடவை உச்சரித்துக் கடைசியில் புருஷரூபமாய் விளங்கி பிராணபதி இனி தாமதஞ்செய்யாமல் சீக்கிரமாய்ப் புறப்படுவீர் யென்று சொன்னாள் விவேகானந்தனும் சரியென சம்மதித்துக்கொண்டு, இருவருமாய் ஆண்பிள்ளை வேஷத்துடனே போய்க்கொண்டிருந்தனர்.

இவர்கள் இவ்விதமாய்ப் போய்க்கொண்டிருக்கையில் வழியில் ஓர் காட்டாற்றைக் கண்டார்கள். இருவரும் அந்நதியைத் தாண்டுவதற்கு சக்தியற்றவர்களாதலால், இதற்கென்ன யோசனையென்று சிலநேரம் ஆலோசித்துக் கொண்டிருந்தனர். குணரத்தினம் சற்று நிதானித்து, பிராணபதி! நாம் இத்தகையதாய் யோசிப்பதற் பிரயோசனமில்லை. நமக்கெதிரிலிருக்கும் இந்த ஆலவிருக்ஷத்தின் மீதேறிப் பார்ப்போமானால் ஜனத்திரள் செல்லும் பாதைமார்க்கந்தெரியும் அச்சமயம், யாம் நமது தேசத்திற்குச் செல்வதற்கிசைந்த நன்முயற்சியாதேனும் புரிவோ மென்றனள். அவ்வார்த்தையைக் கேள்வியுற்ற விவேகா

னந்தனும் சரியென்று சம்மதித்துக்கொண்டு, அருகிலிருந்த ஆலவிருக்ஷத்தின் கிளைமீதேறிப் பார்த்தனன். வடக்கே வெகுதூரத்திற்கப்பால் கடல்காணப்பட்டது. அங்ஙனம் சில கப்பல்களும் போக்குவரத்தாயிருந்தது. அதனைக்கண்டவுடனே விவேகானந்தன் விருக்ஷத்தைவிட்டிறங்கிவந்து பெண்ணே! இனி நமது தேசத்திற்குப் போவதற்கு வெகு சுலபமான மார்க்கங்கிடைத்தது, இந்த ஆற்றின் கரையோரமாகவே போய்க்கொண்டிருந்தோமானால் கடற்கரை எதிர்ப்படு போய்க் கொண்டிருந்தால் கப்பல் மாலுமி நம்மைக் கப்பலிலேற்றிக் கொண்டுபோய் நமது தேசத்தில் விடுவான். அச்சமயம் யாம் யாதொரு கஷ்ட நஷ்டமுமில்லாமல் நமது தேசத்திற்போய் சுகஜீவியாயிருப்பதற்காகுமென்று சொன்னான். குணரத்னமும் சரிதானென சம்மதித்துக்கொண்டு பின்பற்றிச்சென்றாள். இருவருமாய் அவ்வாற்றங்கரை யோரமாகவே வெகுதூரம் நடந்துவந்தனர். கடற்கரையையும் பார்த்தனர். தமது மனவிசாரமும் தீர்த்தனர் கடற்கரையில் இருவருமாய் உட்கார்ந்து வெகுநேரம் ஆலோசித்துக் கொண்டிருந்தனர்.

இவர்களிருவரும் கடற்கரையி லுட்கார்ந்திருப்பதைப் பார்த்த மாலுமியானவன் இவர்கள் யாரோ வழிப்போக்கர்போற் காண்கிறது அன்றியும், இவர்கள் கப்பல்யாத்திரை செய்பவர்போற் காண்கிறது. என்றாலும், நாம் கடற்கரை யோரமாய்க் கப்பலை நடத்திக்கொண்டு போவோமானால் உண்மை விளங்குமென கப்பலை கடற்கரையோரமாய் நடத்திக்கொண்டு போனான் விவேகானந்தன் மனமகிழ்ந்து பெண்ணே குணரத்னம் இதோ கப்பலும் அருகில் வந்து விட்டது. இனி நாம் கப்பலேறிச் செல்வோமென மாலுமிக்குக் கைசைகை காண்பித்து கப்பலை வரவழைத்தனன். மாலுமியும் சம்மதித்து கடற்கரையோரமாய் கப்பலை நடத்திக்கொண்டுவந்து கரையில் நிறுத்தி ஓர் படகை ஜலத்திற்போட்டு ஓர் மனிதனையும் அனுப்பினன். அவன் கரையிற்சென்று விவேகானந்தனையும் குணரத்னத்தையும் அழைத்துக்கொண்டு கப்பலருகிற் சென்றான். அவ்விருவரும் கப்பலேறினார்கள்.

## Scene 5.

இடம் — கடல்

### கதாநாயகர்.

விவேகானந்தன், குணரத்னம், மாலுமி.

இங்ஙனம் இவர்கள் நிலை இவ்விதமாயிருக்கையில் கப்பலானது கடலிற்செல்லும்போது குணரத்தினத்தின அழகைக்கண்ட மாலுமியானவன் ஆச்சரியமடைந்து விசாரிப்பதாயினன்.

மாலுமி:—அப்பா! நீங்கள் எந்த தேசத்தினர்? எங்கிருந்து எங்கு செல்கின்றீர்?

குணரத்னம்:—ஐயா! யாங்கள் தென்தேசத்தில்; யான் இவருடைய மைத்துனர். இவரெனது அத்தான் எங்களுடைய காலவித்தியாசத்தினால் இவ்வளவுதூரம் வந்துவிட்டோம். எங்களை எமது தேசத்திற் கொண்டுபோய் விடுவதற்கு எங்களிடம் கப்பற் செலவு கிடையாது. அதற்கு பதிலாக இந்த முத்துமாலையை எடுத்துக் கொள்வீர்.

என, மாலுமியினிடம் முத்து மாலையையும் கொடுத்தனன். அவன் அதனை வாங்கிக்கொண்டு மனமகிழ்ந்தவனாய் அவ்விருவருக்கும் வேண்டிய பலகாரபக்ஷணமும் கொடுத்து தனது சகோதரரைப்போற் காப்பாற்றினன், அவனுடைய உபசரணைக்கு விவேகானந்தனும், குணரத்னமும் மனமகிழ்ந்தவராய் இனி நமக்கு சகல நன்மையும் கிடைப்பதுடன் நமது தேசத்திற்கும்போய் நமது தாய்தந்தை பந்துஜன மித்திரர் முகதரிசனமுங் கண்டு மனமகிழ்வோமெனும் பேராவலுடன் ஆனந்தமாயிருந்தனர்.

இங்ஙனம் இவர்கள் நிலை இத்தகைய ஆனந்தமா யிருக்கையில் மழைகாலமானதினால் காற்றும் மழையும் விசேஷமாய்ப் பொழிந்தது கடல் அலைகளின் வேகத்தினால் கொந்தறிப்பதிகரித்து கப்பலை வெகு தூரத்திற் கொண்டுபோய்விட்டது. கப்பலிலமர்ந்தவ ரனைவரும் மனமிரண்டு பெருங் கூச்சலிட்டனர். அச்சமயம் விவேகானந்தன் மனவருத்த முடையவனாய் இனியாமென்னவென்று சொல்வது குணரத்னம் இத்தக்கப்பல் நமது கஷ்ட நஷ்டத்தையகற்றி நமது தேசத்திற் கொண்டுபோய் விடுமென்று ஆசையாயிருந்தோம். இத்தக்காற்று

பிழை பகைஞரைப்போல வந்து இத்தகைய அபாயகரமாய்ச் செய்து விட்டதேயென் விசனத்தினன். குணரத்னத்திற்கு யாதொன்றுந் தோற்றமல் இனி நடப்பவை யனைத்துங் கவனிப்போம் பகவான் துணையாயிருப்பாரென தன்மனதைத்தானே தேற்றிக்கொண்டு ஓர் விதமாயிருந்தனன். மாலுமியும் இனி இதற்கெவ்வித முயற்சி புரிவதென பற்பலவிதமாயோசித்தும், தன்னுற்கூடுமான பிரயாசையுடன் கப்பல் ஓடும் வேகத்தை நிறுத்தியும் முடியாமல் மேற்கே வெகுதூரமாய் கப்பலைக்கடற்காற்று இழுத்துக்கொண்டு ஓடியது. அச்சமயம் மழையும் நின்றுவிட்டது காற்றின் வேகமும் அடங்கியது சகலரும் ஓர்வித மனதைரியமா யிருந்தனர். ஓர் பெரிய கப்பலானது அந்தக் கப்பலின் அருகில் வருகலாயின. மாலுமி மனமகிழ்ந்து துணைகப்பலும் அதோ எதிரில் தோற்றுகிறதே அந்தக்கப்பலின் பின்பற்றிச் சென்றால் நலமெனக்கருதி தமது கப்பலையும் அந்தபெரிய கப்பலின் அருகாமை நடத்திக்கொண்டு போனான். அந்தக்கப்பல் திருடர்களுடைய கப்பல், அவர்கள் அந்தந்த தேசத்திற்சென்று வதிப்போக்கர்கட்கு பலவிதமான ஆசைவார்த்தைகளைச் சொல்லி மோசமாய் அழைத்துக் கொண்டுவந்து கப்பலிலேற்றிக் கொண்டுபோய் அந்தந்த தீவுகளிலிருக்கும் கிராமாதிகட்கு விற்கிரயம்செய்து ஆள் ஒன்றுக்கு 50-கிராகன் வாங்கிக்கொண்டு போவதும் கிரயமானவர்கள் கிராமாதிகாரிகட்கு அடிமையாயிருந்து பயிர்செய்து ஜீவித்துக் கொண்டிருப்பதுமே வழக்கமாயிருப்பதினால் அந்தத்திருடர் வெகுபேரைத்தமது கப்பலிலேற்றிக்கொண்டு வந்தனர். ஆனால் விவேகானந்த னிருக்கும் கப்பல் மிகச்சிறிதானாலும், அந்தக் கப்பலிலிருந்த பிரயாணிகளெல்லாம் அந்தந்த தேசத்தி லிறங்கி விட்டனர். மீதியாயிருந்தவர்கள் இவர்களுடனே 14-பேரிருந்தனர். அவ்விதமான சிறியகப்பல் பெரிய கப்பல் துணையுடனே செல்லும்போது பயங்கரமில்லாமல் சகலரும் மனமகிழ்வா யிருந்தனர். அச்சமயம் அந்தத்திருடர் கப்பற்காரர் "புறாக்கூட்டத்திலே இராஜாளி புகுந்ததுபோல" திடீரென வந்து கப்பலை மடக்கிக் கொண்டார்கள். மாலுமி அதிசயித்து, ஈதென்ன ஆச்சரியம்! இவர்கள் தமது கப்பலை மடக்கிய தென்னவென்று யோசித்துக் கொண்டிருக்கையில் தானே அந்தக் கப்பலிலிருந்து பார்க்கப்பயங்கரமான திடகாத்ர தேஜமமைந்த திருடர்கள் ஓடி வந்து விவேகானந்தனையும், குணரத்னத்தையும், அவர்கள் கப்பலிலிருந்த மாலுமி முதலான சகல ஜனங்களையும் பிடித்துக் கட்டிக்கொண்டு போய்த் தமது கப்பலிலேற்றிக்கொண்டு போயினர்.

அச்சமயம் அவர்களிடம் பிடிபட்டவர்களுடைய மனமெவ்வித
மிருக்குமோ வாசிப்பவர்களை கவனித்தால் பரிதாபமெய்துவார்க
ளெனின் அவர்கள் நிலை வெகு பயங்கரமாகத்தானிருக்கும். ஆனால்,
விவேகானந்தனுக்கு மாத்திரம் விசனமாயிருந்தது, குணரத்னத்திற்
குக்கொஞ்சமும் பயமென்பதில்லை. அஃதேனெனின், தனக்கு ஓர்
மஹான் முன்னம் ரூபமாறும் வித்தையைக் கற்பித்திருப்பதினால்,
எவ்விதமாயினும் தப்பித்துக் கொள்ளுவோமெனும் தைரியமிருந்
தது. மாலுமி முதலானோர் வயறெரிந்து இந்தத்துஷ்டர்கள் நம்மைப்
பிடித்துக் கயிற்றாற் பிணைத்துக் கட்டிக்கொண்டு போவதென்ன?
யாது துன்ப மணுகுமோவென பயங்கர நிலையாயிருந்தனர். திருடர்
களோவெனின் நமக்கு இந்தத்தடவை வெகுலாபங் கிடைக்கும், ஒவ்
வொருவரையும் ஒவ்வொரு நூறுவிராகனுக்கு விற்கிரயஞ் செய்வோ
மெனும் பேராசையை மனதில் வகித்து மனோல்லாசமாய்ப் பாடிக்
கொண்டிருந்தனர்.

விவேகானந்தன்:—ஆ! ஈதென்ன ஆச்சரியம்? உலகிற் ஜனித்த மாந்
தர்களில் சிலர் மனமகிழவும், சிலர் மனமெலிவதுமா யிருப்பது
மென்ன விந்தை? ஆ! விதிவசமோ?

குணரத்னம்.—தாங்களேன் இவ்விதமாய்த் துயரெய்துவ தாயினீர்?
மனிதர்கட்கு சுகதுக்கம் வாய்ப்பது? உலகியல்பு தானே?

விவேகானந்தன்:—அவ்விதமானாலும் சிலருக்கு சுகமும், சிலருக்கு
துக்கமும் வாய்ப்பதென்ன?

குணரத்னம்:—அவ்விதமாய் நினையாதீர்? உலகின் மாந்தர்கட்கு, சுக
மென்றபோதே துக்கமிருக்கின்றதென்று விசனப்படும்போதே
சுகமனுபவிக் கின்றதென மதிக்கவேண்டும்.

விவேகானந்தன்:—அஃதெவ்விதம்?

குணரத்னம்:—திரேதாயுகத்தில் இராவண னென்பவன் மஹா பல
வந்தனாகவும், குரூரகுண மமைந்தவனாகவு மிருந்தான். அவ
னுடைய தைரியத்தினால் அவனிடத்திலிருந்த இராக்ஷதர்களனை
வரும் தீயகுண மமைந்த மாபாபிகளாகவே யிருந்தனர். தேவர்
களையும் சிலசமயம் அடித்து மிரட்டி பயங்கரப்படுத்தித் துன்
புறச்செய்வார்கள். மனிதர்களைக்கண்டால் உயிருடனே கடித்
துத்தின்று விடுவார்கள். அப்படிப்பட்ட துர்க்குணத்தினர் சுகம்

ககமென்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். சிலகாலஞ் சென்ற பிறகு அவர்கட்கரசனாகிய இராவணன் சகோதரியாகிய சூர்ப்ப நகையின் சொற்கேட்டு பஞ்சவடியிலிருந்த சீதையை மோச பெண்ணத்துடன் எடுத்துக்கொண்டு இலங்கைக்குப் போனான். அங்குசில இராக்ஷசிகளை சீதையம்மனுக்குத் துணையாயிருக்கச் செய்து, தனதுமனதின்படி சம்மதிக்கச்சொன்னான். அம்மாது சம்மதியாமல் கற்புடையமாதர்கட்குக் கணவனேதெய்வமெனக் கருதி சதா ராமஸ்தோத்திரம் செய்திருந்தனர். ஸ்ரீராமர் இராவணன் மோசத்தினால் மானைப்பிடிக்கச்சென்று, அகப்படாமையால் அதைக்கொன்று பொய்மானெனத் தெரிந்து, பர்ணசாலையில் வந்து சீதையைக் காணாமையால் இலக்ஷ்மணனுடனே கிஷ்கிந்தையனுகி, வானரசேனைகளுடன் இலங்கைக்குச் சென்று இராவண கும்பகர்ணாதியர்களுடன் மனோகர்வமாயிருந்த இராக்ஷதர்களையும் கொன்றுவிட்டு சீதையை அழைத்துக்கொண்டு போனார். அப்போது சுகானந்தமாயிருந்த இராக்ஷதர்கள் எவ்வளவு துக்கத்தை யனுபவித்திருப்பார்கள்? இவையனைத்தும் தாங்கள் கவனித்தவ ரல்லவோ?

விவேகானந்தன்:—ஆம்! ஆம்!! யான் இராமாயணம் முழுதுங்கவனித்திருக்கின்றேன். ஆனாலும் நீ சகல சாஸ்திரபுராண ஆராய்ச்சி செய்திருக்கின்றாய். ஆயினும் நம்மைப்போற் துக்கமனுபவித்தவ ருலகத்தி லில்லையென்றே நினைக்கின்றேன்.

குணரத்னம்:—(சிரித்து) இது ஓர் துக்கமா? உலகிற் பிறந்த மனிதர்களில் ஒவ்வொருவருக்கும் சமயம் நேரிட்டாற் பல்வித கஷ்டநஷ்ட மனுப விப்பார்கள். ஓர் காலத்தில் ஓர் குடியானவனுக்கு,

விருத்தம்.

ஆவீனமழைபொழிய வில்லம்வீழ
அகத்தினள்நோய்தனில்வருந்த அடிமைசாக
மாவீரம்போகுதென்று விதைகொண்டோட
வழியிலேகடன்காரர் மறித்துக்கொள்ள
சாவோலைகொண்டொருவ னெதிரேசெல்ல
தள்ளவொண்ணாவிருந்துவர சர்ப்பந்தீண்ட
கோவேந்தருழுதுண்ண கடமைகேட்க
குருக்கள்வந்துதக்ஷணைக்கு குறுக்கிட்டாரே.

## கொடுந்துயருற்ற குடியானவன்.

வேழநகரெனுங் கிராமத்தில் தாழ்விலாச்செல்வம் நிறைந்த ஓர் குடியானவனிருந்தான். தனதான்ய சம்பத்தில் குபேரனிவனே யென்று வியப்புறுந் தன்மையானவன் ஜனப்பெருக்கத்தில் அவனுக் குச்சமானமாகிய குடும்பி யெவனுமில்லை. அந்த வேழதேசத்தில் அவனுக்கு நூறுகாணி நிலங்களிருந்தன. இருநூறு அடிமையாட்களிருந்தனர். ஆடுமாடுகளும் விசேஷமாயிருந்தன, இன்னும் பலவிதமான ஆஸ்தி பூஸ்திகளும், ஆடை ஆபரணங்களு மிருந்தன. அவ்வளவு தனந்தான்ய பசுபுத்ரலாப மிருந்ததினால் தனக்கெவரும் நிகரில்லையென மனோ கர்வத்தைத் தானேவகித்தவனா யிருந்தனன். தன்னைப்போன்ற மனிதர்களைக்காணில் அலக்ஷியமாகப் பரிகாசித்து பிழைக்கத் தெரியாத பேயர்களென அவமதித்து, தானே சுகவாழ்வெய்திய மஹாராஜனென மதித்து, சதாகாலமும், பணத்தைப்பலவிதமாய் செலவுசெய்து விதவிதமான பலகாரபக்ஷணம் புசிப்பதும், ஆட்டகச்சேரி, பாட்டகச்சேரியுடன், தாசிகள் நடனகச்சேரியும் வைத்துக் கொண்டு தனது நேத்திரானந்தமாய்ப்பார்த்து மனோல்லாசத்துடன் சதா காலமும் துக்கமென்பதில்லாமல் சுகானந்தமாகவே யிருந்தனன். அவனுடைய சுகவாழ்வைக் கண்ணுற்றோரனைவரும் ஆச்சரியமடைந்தவராய் இவன் தான் சுகபுருஷனெனவே தீர்மானித்துக் கொண்டு தமது துயரத்தையும் வறுமையையும் நினைந்து விசனமடைந்தவரா யிருப்பார்கள். அந்தக் குடியானவனோ ஏழைகளைக் கண்டால் அவர்களை இகழ்ந்து, மானிடப்பதர்களே உங்களுக்கு என் துக்கமெனும் வறுமை நேரிட்டது வறுமை யென்றாலென்ன? துக்கமென்றாலென்ன? சிச்சி பிழைக்கத்தெரியாத பேயர்களே யென பரிகாசிப்பான். இவ்வளவு சுகத்தை யனுபவித்திருந்த குடியானவனுக்கு அகஸ்மாத்தாய் துக்கம் வந்த விபரத்தைச் சொல்லுகின்றேன் கவனிப்பீர்.

### வெண்பா.

மருவினியசுற்றமும் வான்பொருளும்நல்ல
உருவுமுயர்குலமுமெல்லாம்—திருமடந்தை
ஆம்போதவளோடே ஆகுமவள்பிரிந்து
போம்போதவளோடே போம்.

என்னுந் தன்மையாய் அந்த குடியானவனுக்கு அவ்வளவு தனதான்யசம்பத்து நிறைந்திருந்து, சதா சுகியென மனோல்லாசமாயிருக்

தும் அவனுக்குக் கெடுதிகாலம் சம்பவிக்கும்போது நேரிட்ட பரிதாப நிலையைச் சொன்னால் ஆச்சரிய காக்ஷியாகவே யிருக்கும்.

அவ்விதநிலைமையில் ஓர்நாள் தனது வீட்டிலிருந்த பசு கன்று போட்டது, அடிமையாள் அருகிலில்லாமையால் கோபங்கொண்டு அவனை காலைய தினமே அடித்து உதைத்து சம்பளமில்லாமல் வேலையிலிருந்து நீக்கிவிட வேணுமென்று கூச்சலிட்டுக் கொண்டே வெளியில்வருகையில் காற்றுமழையும் விசேஷமாய்ப்பொழிந்து வீடு இடிந்து விழுந்தது அடடா நமக்கு இத்தனை அடிமையாட்களிருந்தும் ஒருவனும் சமயத்தில் அருகிலில்லையேயென வயிறெரிந்து நிற்கையில், கர்ப்பவதியாயிருந்த தனது மனையாள் சகிக்கமுடியாத பிரசவவேதனையால் கதறியழுதனள். "மலைகலங்கினாலும் மனங்கலங்காத குடியானவனுக்கு சந்தோஷம் நீங்கி சஞ்சலமுண்டாகி ஐயோ மருத்துவச்சியாகிலும் அழைத்துக்கொண்டு வருவோமென்று வெளியில் ஓடிவந்தான், தெருவாசற்படியில் நின்றிருந்தவன் மிகவும் பரிதாபநிலையாய் ஐயனே உமது அடிமையாள் இரவு 10-மணிக்கு மரணமடைந்தனன். அவனைத் தகனஞ்செய்ய அனுக்கிரகம் புரிவீரென்று பரிதாபமாய்ச் சொன்னான். அவ்வார்த்தையைக்கேட்ட குடியானவன் மனம்பதறி ஐயோ எனக்கு இப்படிப்பட்ட அடிமை எந்தகாலத்தில் அகப்படுவானென்று விசனித்தழுது ஐந்துவிராகன் வந்த ஆள் கையில்கொடுத்து மயான உற்றுரிமை சாமான்களை வாங்கிவைப்பாய் யான் வருகிறேனென்று சொல்லிவிட்டு மழைபொழிந்த ஈரம் உலருமுன் விதைப்போமென்று வீட்டிற்சென்று விதைநெல் விதை எடுத்துக்கொண்டு வயலுக்கு ஓடினான். அச்சமயம், அவனுக்கு முன்னம் கடன்கொடுத்தவர்களெல்லாம் திடீரென ஓடிவந்து எமது கடனைக் கொடுப்பீரென்று வழிமடக்கினார்கள்.

அவர்கட்கும் பலவித சமாதானஞ் சொன்னான் ஒருவன் சாவோலைக்கொண்டு ஐயா உமது பங்காளியின் மருமகன் நேற்றிரவு இறந்தான், சகலரும் வந்திருக்கின்றார்கள். நீர் வந்தபிறகுதான் பிணம் எடுப்பார்களாம் சீக்கிரமாய் புறப்படுமென்றான். உடனே ஒருவன் ஓடிவந்து உமது மைத்துனர் உம்மை காணவந்தனர். அவரை நாகசர்ப்பங்கடித்து விட்டதாம். சீக்கிரமாய்வந்து காண்பீரென்றான். குடியானவன் வயிறெரிந்து ஐயோ ஈதென்ன அநியாயம் ஆபத்தாயிருக்கின்றதே! ஒரே தடவையில் சகல துன்பமும் ஒன்றாய் வந்துவிட்டதேயென்று சஞ்சலப் பட்டுக்கொண்டிருந்தனன். இராஜாங்கத்தார்

வரி வாய்தாபணத்திற்கு வாரன்டு கொண்டுவந்து ஏனையா இன்னுந் தாமதம் பணத்தை எடுஎடு கொடுகொடுவென்று கூச்சலிட்டார்கள். என்னசெய்வான் பாபம்? இடிமேலிடி விழுந்தால் எவ்விதம் சகிப்பதென ஒன்றும் பதிற்சொல்வதற் கியலாமல் உட்கார்ந்து கொண்டான் அத்தருணம் சிலர் ஓடிவந்து ஐயா! இன்றைய சாயங்காலம் யாங்கள் யாத்திரைக்குப் போகிறோம். உமது குருநாதனுக்கும் அவருடைய சிஷ்யராகிய எங்களும் இன்றையதினம் உம்முடைய அன்னம் புசித்துவிட்டுப் போகவேண்டும் சீக்கிரமாய் மடத்திற்கு வருவீரென்றார்கள். குடியானவன் மனந்திகைத்து, ஆவிதிவசமே வீட்டிலுள்ள பசு கன்றுபோட்டது அதற்கு தீனி முதலானவை யார்கொடுப்பார்கள் வீடுவிழுந்துவிட்டதே என்னென்ன சாமான்கள் எவ்வெவ்விதமாய்ப் போனதோ? மனைவி பிரசவவேதனை யடைந்தாளே, அவளுக்கென்னமாச்சுதோ பங்காளிமருமகன் இறந்ததற்கு யான் வரவில்லை யென்பதாய் என்னென்ன நிந்திக்கின்றார்களோ? மைத்துனனை நாகசர்ப்பந் தீண்டிய தென்கின்றாரே இந்நேரம் என்னகதியானானோ? கடன்காரரும் வம்பு செய்கிறார்களே வாய்தாபணத்திற்கும் துன்பஞ்செய்கின்றார்களே. ஐயோ எதுஎவ்விதமானாலும் நமது குருநாதன் நாம் வருகிறவரையிலும் தமது சிஷ்யர்களுடனே தானும் பசியாயிருப்பாரே என்னசெய்வேனென்று அழுதுக் கொண்டிருந்தானே அவன் மனமெவ்விதமா யிருக்குமென்று குணரத்னம் சொன்ன வாக்கியத்தைக் கேட்டவர்களே ஆச்சரியம்! ஆச்சரியமென்று தமது கஷ்டத்தையும் நினையாமல் பரிதாபமடைந்தார்கள்.

விவேகானந்தன்:—சரி! அவ்வித சஞ்சலத்தி லாழ்ந்திருந்தவன் கதி எவ்விதமாயின?

குணரத்னம்:—குடியானவன் அத்தகைய ஆழ்ந்த சஞ்சலத்தினால் அழுதுக்கொண் டிருக்கையில், அருகிலிருப்பவர் அவன் பரிதாப நிலைமையைக் கண்ணுற்று ஓர்விதமாய் சமாதானப் படுத்தினார்கள். அவ்விதமாய் ஒவ்வொருவருக்கும் துக்கம் நேரிடும்போது பல விதமான மனசஞ்சலம் நேரிட்டுதான் சுகமடைவதற்காகும்.

மாலுமி:—தாங்கள் புகன்றவை உண்மையே நாமிருப்பது எமதூதரிடத்திலகப்பட்ட உயிரைப்போ லிருக்கின்றதே.

குணரத்னம்:—இது ஓர் பெரியகாரியமா? சுக்ரீபன் வாலிக்குப்பயந்து ஓர் மலையில் மறைந்திருந்தபோது ஆஞ்சநேயன் சுக்ரீபனுக்குத் துணையாயிருந்து காப்பாற்றி இராமலக்ஷ்மணனை யழைத்துக்

கொண்டுபோய் வாலியைக் கொன்று சுக்ரீபனுக்குப் பட்டாபிஷேகம் செய்து சுகமாயிருக்கும்படி செய்தார். இவ்விதமே நமக்கும் நற்காலம் சமீபித்தபடியால் இவர்கள் நம்மை இவ்விதமாய் கஷ்டப்படுத்துவதாயினர். இதைப்பற்றி நீங்கள் யாதொரு மனக்கவலையு மெய்தாதீர். "கெடுவான் கேடு நினைப்பதுபோல" இந்தத் துஷ்டர்கள் கெட்டுப்போவதற்காக தம்மைப் போன்ற ஜீவர்களை துன்பஞ் செய்வதாயினர்.

என, குணரத்னம் புகன்றவை யனைத்தும் வினவியவர்களனைவரும் ஓர் விதமாய் தைரியமுற்றிருந்தனர். திருடர்களோவெனின் மனோல்லாசமா யிருந்தனர். இவ்விதமாயிருக்கையில் ஓர் புயல்காற்றுண்டாகி கப்பலை நடுக்கடலில் கொண்டுபோய் விட்டது. பிடிப்பட்டவர்களனைவரும் பிராணன் போனாலும் போகட்டும். குளிருமாகாரமும் உடலோடொழிந்த விதமாய் கஷ்டமுங் கவலையும் கடலிற் கழிந்து போய் விடுமென்று மகிழ்வாயிருந்தனர். திருடர்கள் மனந்திகைத்து கப்பலை கரையருகிற்சேர்க்க பலவித முயற்சிபுரிந்தும் நிற்காமல் இராக்ஷதவனத்திற் கொண்டுபோய் விட்டது. காற்றின்வேகமும் அடங்கியது மழையும் நின்றது. திருடர்கள் இளைப்பாறுதலாக கப்பலை கடற்கரையருகில் கொண்டுவந்தனர். சகலரும் அங்கிறங்கி சமையல் செய்து புசிப்போமென கூடாரங்களியற்றினார்கள். தாங்கள் பிடித்துக்கொண்டுவந்த விவேகானந்தன் குணரத்னம் மாலுமியுடனே பிடிபட்ட சகலரையும் வரிசையாய் உட்காரவைத்துவிட்டு திருடர்கள் சமையல் செய்துக் கொண்டிருந்தனர்.

இங்ஙனம் இவர்கள் நிலை இத்தகையதாயிருக்கையில் அவ்வனத்தின் அதிகாரியாய் எவர்கட்கும் அஞ்சாமல் அகப்பட்டவர்களையெல்லாம் பிடித்துக் கொண்டுபோய்ச் கட்டுத்தின்னும் ஓர் இராக்ஷதன் அவர்கள் முன்வந்தான். அவன் உயரம் நூறடி அதற்குத்தகுந்த பருமனும், மலைபோன்றசிரசும், தேக்கமரத்தைப்போன்ற கைகளும், யானைத்தந்தங்கள் போன்ற பற்களுமாயிருந்தன. அவ்வித விகாரரூபமமைந்த இராக்ஷதன் இவர்கள்முன் வந்தவுடனே சகலரும் மனநடுக்க மெய்நினைவரா யிருந்தனர். அந்தராக்ஷதன் தன்கையில் ஓர்மரத்தை ஒடித்தெடுத்துக் கொண்டுவந்து இடையன் ஆட்டுமந்தையை மடக்கிக் கொண்டு வருவதுபோல, அந்தமரத்தினால் திருடர்களையும் அவர்களழைத்துக்கொண்டு வந்தவர்களையும் ஓட்டிக்கொண்டு தனது வாசஸ்தானத்திற்குச் சென்றான். அங்கு பார்த்தால் இருநூறடி உயரமும்

அதன்மேல் சந்திரனவுமன்ன நான்கு மலைகளமைந்த ஓர் குகையா யிருந்தது. அதைக் கண்டவுடனே சகலரும் மனமிரண்டு ஐயோ ஈதென்ன காலவிபரீதமென்று மனமெலிந்திருந்தனர். இவர்களனை வரும் வந்தபிறகு இராக்ஷதன் ஓர்பெரிய கற்பாறையைக் கதவுபோல வழியில் வைத்துவிட்டு, ஓர் இரும்பு சலாக்கையை எடுத்துக்கொண்டு வந்து, திருடரில் பத்துபதினைந்து பேரைகுத்தி அங்காரம் திகுதிகு வென்றெரியும் அனலிற்காய்ச்சி உயிருடனே சுடுகையாகவே தின் றான். இவ்விதமாகவே தினந்தோறும் ஒவ்வொருவரையும் பார்த்து பார்த்து தின்று கொழுத்திருந்த திருடர்களையெல்லாம் கொன்று தின்றுவிட்டான்.

ஓர்நாள் இராக்ஷதன் நித்திரை செய்துக்கொண் டிருக்கையில், குணரத்னம், ஆலோசனைபுரிந்து, ஐயா! இந்த ராக்ஷதனோ கொடிய துஷ்டனா யிருக்கின்றான். இதோ அனலில் காய்ந்திருக்கும் இரும் புச்சலாகையை எடுத்து அவன் கண்ணைக் குத்திக் கொன்றுவிட்டு ஓடிப்போவோமென்று சொன்னான். அவர்களனைவரும் ஒன்றாய்ச் சேர்ந்து இரும்புக்கம்பியை எடுத்து இராக்ஷதன் நித்திரை செய்யும் போது அவன் வாயில் குத்தினார். அது மழுவைப்போல் அனலி லிருந்ததால் இராக்ஷதனுடைய வாயையும் நாவையும் கொளுத்தி விட்டபடியால் அவன் அலறிபுரண்டு அக்கினிகுண்டத்தில் விழுந்து துடிதுடித்து இறந்துபோனான்.

அச்சமயம் குணரத்னம் திருடர்களும் அகாரணமாய் பக்ஷண மானார்கள் அவனும் அக்கினிக்குப் பக்ஷணமானான். இனி நமக்கு யாதொரு பயமுமில்லையென தீர்மானித்துக்கொண்டு சகலரும் ஒன் றாய்வந்து கற்பாறையைத் தள்ளிவிட்டு கடற்கரையில் வந்து திருடர் களுடைய கப்பலிலேறினார்கள். மாலுமி கப்பலை பக்குவமாய் நடத்தி கடலில் வெகுவேகமாய் வருகையில் மாலுமிக்கு மனசஞ்சல முண் டாகி சொல்லுகிறான்.

மாலுமி:—ஆ! ஹா!! உலகிலுதித்த மாந்தர்களில் நம்மைப்போற் சஞ் சலமடைந்தவருலகிலுண்டோ,

விவேகானந்தன்:—ஐயா! உலகிற்பிறந்தமனிதர்கள் ஒவ்வொருவரும் முன் ஜனனத்திற் செய்த கர்மவினையின்படியே கஷ்ட நஷ்ட மடைவார்கள். அதைக்குறித்து விசனப்படுவதினாற் பிரயோ சனமென்ன? இவையனைத்தும் முன் ஜனனத்தின் வினைப்பய னன்றி இப்போதுசெய்த அநியாயத்தினால் நேர்ந்தவையல்ல

ஆனால் அறிவுடையோர் இவையனைத்தும் அனுபவித்து கர்ம விமோசனம் செய்யவேண்டுமென் றிருப்பார்களன்றி விசனப் படார்கள். என்னசெய்யலாம் எழுதாகுறை அழுதால் வருமா? இவையனைத்தும் யோசித்துப் பார்க்கவேண்டுமன்றி விசனப்படு வதினால் பிரயோசனமென்ன? ஆகையால்,

### அறுசீரடி யாசிரிய விருத்தம்.

அவரவர்கள்செய்தவினை அவரவரேயனுபவிப்பர்
அவையனைத்தும்
தவறுதலென் றுணர்வதெல்லாம் மதியீனத்தாலென்னுந்
தப்பிதந்தான்
கவனமுடன் ஒவ்வொன்றும் ஆராய்ந்துபகுத் துணர்ந்து
கருதல்வேண்டும்
அவனிமிசைஉத்தமர்கட் குற்றவையென் றுணர்வோர்கள்
அறிவுள்ளோரே.

என்னுந்தன்மையாய் உலகிற்பிறந்த ஒவ்வொருவரும் யாதொரு பாபமும் செய்யாதிருந்தால் எப்போதும் கஷ்ட நஷ்ட மில்லாமல் ஜீவித்திருப்பதற்காகும். அவ்விதமின்றி மதியீனத்தினால் பாபமேது? புண்ணியமேது பகவானேது உண்பதும் உடுத்துவதுந்தான் கண்ட காக்ஷியென்று மனோகர்வத்தைத் தனைவகித்திருந்தால் அநேக பழி பாபங்கள் சூழ்ந்து வியாதியினால் துயருற்று மரணமடைந்தால் மறு ஜனனத்தின் பலவிதமாய் துயரடைவதற்காகும் அத்தகைபதாய்த் துயரடைவதற்கு விசனப்பட்டாலும் ஊழ்வினைவிடுமா? இவையனு சரித்தவர்கள் மனிதர்களிற் சிறந்தவராகும்,

மாலுமி:—ஆம்! தாங்கள் சொல்வது உண்மையேயென்றாலும், உல கிற்பிறந்த மனிதர்களில் யாம்தானோ பாபஞ்செய்தோம் மற்ற வர்கள் பாபஞ்செய்ய வில்லையோ?

விவேகானந்தன்.—மனிதர்கள் உலகிற்பிறந்தவர்களெல்லாம் பாபஞ் செய்ததினால்தான் உலகிற்பிறந்து பசி தாக நித்திரை, வியாதி களாற்சிக்கி மரணமடைகின்றனர். பாபஞ் செய்யாதவர்களா யின் நித்யஜீவனாய் பசி, தாக, நித்திரை, வியாதி, மரணமின்றிய சுத்தாத்மாவாய் மோக்ஷலோகத்தி லிருப்பார்கள்.

மாலுமி—சரி, அவ்விதமாயின் பாபஞ்செய்தவர் மனிதர்களாய் பிறந் தார்களானின் யாமும் பாபஞ்செய்திருந்து மனிதராய்ப் பிறந்

டினும் அவர்களனைவரும் சுகானந்தமாயிருக்க யாம் இவ்விதமாய் மரணபயங்கர கஷ்டநிலையி லிருப்பதென்னை?

விவேகானந்தன்:—பாபத்துள்ளினும் உயர்வு தாழ்வெனும் இருவகையுள்ளது, அவைகளில் எவ்வளவுபாபஞ்செய்து பிறந்தார்களோ அவ்வளவு கஷ்டநஷ்ட மடையும்படி நேரிடும்.

மானுமி:—யாம்தானேது அவ்வளவு விசேஷபாபஞ் செய்திருக்தோம். இத்தகையதாய் மரணபயங்கர கஷ்டநஷ்ட மடைந்து பாதவிக்கின்றோமே.

குணரத்னம்:—சரி! அவ்விதமாயினும் வினைசம்பந்தத்தினால் வந்த கஷ்டத்திற்கு யாமென்ன செய்வது? வருவது வந்தேதீருமல்லாமல், தடுக்கமுடியுமா? போனதை நினையாமல் இனி வருவதை கவனித்துத் தப்பித்துக் கொள்ளவேண்டும்.

மானுமி:—சென்றதும் துன்பம், நிகழ்வது துன்பம், வருவதுந்துன்பமாயிருந்தால் பிழைப்பதுதானெப்போது. அன்றியும், சாகும் வரையிலும் சஞ்சலமாயிருந்தால் வாழ்வதெந்தநாள். அவ்விதமின்றி சதாசஞ்சலமே யனுபவித்து மரணமடைவதா யிருந்தால் அநியாயமல்லவோ?

குணரத்னம்:—(சிரித்து) ஐயா தாங்கள் சொல்வது ஆச்சரியமாகவே யிருக்கின்றது. ஒவ்வொருவருக்கும் சுகதுக்கம் வருவது சகஜமேயாகும். நம்மினுங் கஷ்டப்பட்டவர்களெல்லாம் பிறகு சுகானந்தமாயிருக்க வில்லையா?

மானுமி:—ஆ! அப்படியா? யாமே துயரடைந்தோமென்றாலும் நம்மினுங் கஷ்டநஷ்ட மடைந்தவர்களு முண்டோ? சரி! அவர்களில் எவர்களேனும் இவ்விதமாய் கஷ்டமனுபவித்தார்களோ?

குணரத்னம்:—ஆ! நாமென்ன கஷ்டப்பட்டோம் ஓர் அரசகுமாரன் ஒருநாள் பட்டகஷ்டத்திற்கு ஈடாகுமோ?

மானுமி:—ஐயோ! அப்ப்டியா? அதை கொஞ்சம் விபரமாய்ச் சொல்வீர்.

குணரத்னம்:—அப்படியே தெரிவிக்கின்றேன் கவனிப்பீர்.

## அபாயத்திற்சிக்கிய அரசகுமாரன்.

வீரத்தன்மையிலும் சமர்த்திலும் படைத்துணையிலும் பராக்ரமத்திலும் சிறந்த ஓர் இராஜபுத்திரன் மனோற்சாகமாய் தனது சே

இதாகிய சில வீரவான்களைத் துணைவகித்துக்கொண்டு ஆரண்ய மார்க்கமாய்ப் போய்க்கொண் டிருந்தனன். அச்சமயம் பெரிய பர்வதம்போன்ற திடகாத்ரதேகமும், பார்ப்பதற்கு பயங்கரமமைந்த குரூரபார்வையுமுடைய ஓர் யானை அம்மார்க்கமாய்ப் போய்க்கொண் டிருந்தது. அதனை ஓர் ஆட்டுக் குட்டியைப்போல மதித்து அவர்களிற்சிலர் யானையின்மீது அம்பெய்தார்கள். அந்த யானை திடீரென திரும்பி இவர்களைக் கொல்வதற்கு துரத்தியது. அவர்களனைவரும் மனமிரண்டு திட்டென்றெகிரி எட்டுத்திசையுமாய்ப்பரவி அரசகுமாரனைப்பிரிந்து ஓடிப்போனார்கள். யானை சகலரையும் விடுத்து ஓடிப்போனவனுக்கு ஒன்பதாமிடத்து குருபலனும், அகப்பட்டவனுக்கு அஷ்டமத்துச் சனிபலனும் அமைந்ததுபோல அரசகுமாரனைத் துரத்திக்கொண்டு ஓடியது, அவன் மனமிரண்டு ஐயோ துணையாய் வந்தவர்களனைவரும் தூரத்திற்போய் விட்டார்களே. யாமெவ்விதமாய் பிழைப்போமென ஓடுந்தருணம் வழியிலேயிருந்த ஓர் பெரிய ஆலவிருக்ஷத்தைக்கண்டு இனி நமக்கு பயமில்லை ஜெயந்தாமென் றெண்ணி திடீரென மரத்தின் கிளைமீதிலேறிக் கொண்டனன். அந்த யானையானது மஹாகோபத்துடனே ஓடிவந்து அவனேறியிருந்த கிளையுடனே மரத்தைப் பிடித்துக் குலுக்கி அசைத்து வேருடன் பிடுங்கி பூமியிலெறிந்தது.

அச்சமயம் அரசகுமாரன் மனம்பதறி ஐயோ விதிவசமே அன்னை இடும் அநியாயமானதுபோல் எறியமரத்தையும் வேருடன் பிடுங்கி பெறிந்து விட்டதேயென மனமிரண்டு அடுத்த மரத்தின் மீதேறினன். அம்மரத்தையும், அவ்விதமே அந்தயானை வேருடன் பிடுங்கிபெறிந்தது அரசன் மனமிரண்டு வதைத்து இனிநமது தாய் வயிற்றில் நெருப்பையிட்டோமென தீர்மானித்து அங்கிருக்கும் மரங்களின் மீதேறுவதும் அவைகளையெல்லாம் யானைவேருடன் பிடுங்கி பெறிவதுமாயிருந்தது. என்னசெய்வான் பாபம், இனி பிழைப்போமென்று கிஞ்சிற்றும் எண்ணவில்லை, இனி மரத்தின்மீதிலேறும் ஆசையை விட்டுவிட்டான். என்றாலும் மனபயங்கரம் பொல்லாது. வீறிட்டலறி யழுதுக்கொண்டு ஓடினான் அப்போது யானை விடாமல் துரத்திக்கொண்டு போகும்போது, வழியிலேயிருந்த ஓர் பாழ் கிணற்றில் திடீரெனகுதித்தனன். அந்தக்கிணற்றில் வெய்யல்திக்ஷண்யத்தினால் ஜலமில்லாமல் உலர்ந்திருந்தது. ஆனால் அங்கு அநேக விஷஜெந்துக்களு மிருந்தன. அவைகளைக்கண்ட இராஜகுமாரன்

திடுக்கிட்டு, ஐயோ ஈதென்ன விபரீதகாலம் இனி யாதென்செய்வேன். இத்தகையபயங்கர நிலையிலிருக்கின்றேனேயென்று விசனப்படும்போது நாகசர்ப்பம் புஸ்ஸென்றெகிறி கடிக்கவந்தது. அதற்குத் தப்பித்துக்கொண்டு அந்தக் கிணற்றின் சுவற்றில் படர்ந்திருந்த ஆலின்விழுதை எகிறிப்பிடித்து பல்லியைப்போல சுவற்றில் ஒட்டிக்கொண்டிருந்தனன். அச்சமயம் அங்கிருந்த ஓர்எலி ஓடிவந்து அடடாமனிதர்கள் நம்மினத்தினர்க்குப் பகைஞரானதினால் இனி இவனை கொல்லாமல் விடுத்தால் நம்மினத்தினரனைவருக்கும் கெடுதிசெய்வான் ஆகையால், இவனை எவ்விதமாயினும் கொன்றுவிட்டால் நம்மினத்தினரனைவருக்கும் நன்மையாகுமென்றெண்ணி அந்த ஆலின் விழுதை பற்களினால் கரகரவென கடித்துக் கத்தரித்துக் கொண்டிருந்தது அச்சமயம் அரசகுமாரன் திடுக்கிட்டு, ஒருகையினால் எலியை ஓட்டிக்கொண்டு மற்றொருகையினால் ஆலின் விழுதைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டிருந்தனன். அச்சமயம் அந்தக் கிணற்றின்மேல் இருந்த விருக்ஷத்தின் கிளையிலிருந்த தேன்துளி தன்மீது விழுந்து கொண்டிருந்தது அதனைத்தனது நாவினால்நக்கி அடடா இந்தத்தேன் மிகவும் ருசிகரமாயிருக்கிறதென்று ஆனந்தித்துக் கொண்டிருந்தனன் அச்சமயம் ஆனையும் ஓடிவந்து தனது தும்பிக்கையை விடுத்து இவன் குடுமியையாவது இழுத்துவலித்து வெளியில் போட்டுக் கொல்வோமென்று தன்னாலியன்ற வரையிலும் பிரயாசையெடுத்தும் முடியாமல் போய்விட்டது, அப்போது அரசகுமாரன் இனிவிட்டது சனிகொடுமையென்று தப்பித்துக்கொண்டு தனது வீட்டிற்குப்போய் தாய்தகப்பனுடன் அன்பாயிருந்தனன்.

அவ்விதமே நமக்கும் இனி நற்காலம்வந்து சுகஜீவியாயிருக்கலாமென்று குணரத்னம் புகன்றதையுணர்ந்த மாலுமியானவன் ஒருவிதமாய் மனந்தேறி யிருந்தனன். கப்பலும் கடல்மார்க்கமாய் சிந்துதேசக்கடற்கரையில் வந்தது, அங்ஙனம் இறங்குபவர்களிறங்கினர்கள். அவர்களுடன் குணரத்னமும் விவேகானந்தனும் இறங்கி இனி நமக்கு நற்காலம் வருமெனத்துணிந்து கடற்கரையில் வந்தனர்கள்.

அங்ஙனம் கடலலையின் காற்று வீசுதலினாலும், மனிதர்களின் கூட்டத்தினாலும் மனமகிழ்ந்து இருவரும் தமக்கிருந்த கஷ்டநஷ்டத்தைமறந்து இனி நமக்கு நற்காலந்தானென மனமகிழ்ந்தவராய்ச் சென்றனர்.

## Scene 6.

இடம் — சிந்துதேசத்தின் நந்தவனம்.

### கதா நாயகர்.

விவேகானந்தன், குணரத்னம், வழிப்போக்கன்.

இங்ஙனம் இவர்கள்நிலை இவ்விதமாயிருக்கையில், அவர்களுடனேசென்ற ஓர் வழிப்போக்கன் கப்பலைவிட்டிறங்கி கானகமார்க்கத்திலுள்ள தனது தேசத்திற்குப் போவதற்காக செல்லும்போது விவேகானந்தனும் குணரத்னமும் அந்த வழிப்போக்கனுடனே பேசிக்கொண்டே போயினர். இரண்டுபகல் மூன்றிரவு ஆனவுடனே அருணோதயத்தில் வழியிலெதிருற்ற ஓர் சோலையைக் கண்டார்கள். அங்கு அம்மூவரும் சென்று அங்கிருக்கும் நீரோடையில் ஸ்நானபான நேமநிஷ்டை முடித்துக்கொண்டு அங்ஙனம் அடர்ந்து செழிப்புற்றிருக்கும் விருக்ஷங்களிற் காய்த்துக் கனிந்திருக்கும் பழங்களைப் பறித்துப் புசித்துக் களையாறினார்கள். குணரத்தினமும் விவேகானந்தனும் தமக்கிருந்த கஷ்ட நஷ்டத்தையும் மறந்து விருக்ஷங்களின் அழகை பார்த்துக்கொண்டிருந்தனர். அச்சமயம் வழிப்போக்கனும் அவர்களுடனே வேடிக்கையாய் அந்நந்தவனத்தி லுலாவிக்கொண்டிருந்து இளைப்பாறுதலாக ஓர் ஆலவிருக்ஷத்தின் நிழலில் வந்திட்கார்ந்து மனோல்லாசமாய்ப் பேசிக்கொண்டிருந்தனன்.

குணரத்னம்:—அண்ணே! யாங்கள் தான் இத்தகைய கஷ்ட நிஷ்டூர காலவித்தியாசத்திற் கிசைந்தவிதமாய்க் கானகவாசியா யலைந்துக்கொண்டிருக்கின்றோம். தாங்களும் எங்களுடன் இவ்விதமா யலைந்துக்கொண் டிருப்பதென்ன?

வழிப்போக்கன்:—என்னுடைய காலவித்தியாசத்தினால் இத்தகைய துன்பமனுபவிக்கலாயிற்று.

விவேகானந்தன்:—ஆ! அப்படியா? நாம்தான் கஷ்டஜீவிகளென்றால், உலகமே அவ்விதமிருக்கின்றதே ஐயோபாபம் இவரும் நம்மைப்போல கஷ்டப்பட்டாரெனினும், நமக்கு முன்னால் என்னென்ன கஷ்டமடைந்தாரோ?

குணரத்னம்:—அண்ணே! தாங்கள் வசிப்பது எங்கே? யாதுகாரணமாய் இத்தகைய கஷ்டப்படலாயினீர்?

வழிப்போக்கன்:—நான் சிந்துதேசத்தின் அருகாமையிலுள்ள மலை நாட்டில் மிகவுந்தனவந்தனு யிருந்தேன் ஓர்நாள் எனது மாமியார் வீட்டிற்குப் போவதற்காக வந்தேன். அந்தசமயத்தில் சில திருடர்கள்வந்து என்னைப்பிடித்துக் கொண்டுபோய் நீங்களிருந்தகப்பலிலேற்றிக்கொண்டுபோய் அவ்வளவு பயங்கரமான கஷ்ட நஷ்டத்தை யனுபவிக்கச் செய்தனர்.

விவேகானந்தன்:—சரி! போனதெல்லாம்போகட்டும் இனிமேல் யாம் யாதொரு துயரமுமின்றி நமது தேசத்திற்போய் ஜீவித்திருப்போம்.

வழிப்போக்கன்:—ஐயா! நற்காலம் வந்ததென்றாலும் பயங்கரமாத்திரம் மனதை வருத்துகின்றதே என்னசெய்வேன்?

குணரத்னம்:—இன்னும் எவ்வளவு தூரத்தில் உமது வாசஸ்தான மிருக்கிறது அதனை விபரமாய்ச்சொல்வீர்.

வழிப்போக்கன்:—இந்நந்தவனத்திற்குத் தெற்கே சுமார் பத்துகாத மிருக்கும்.

விவேகானந்தன்:—அவ்வளவுதான்? அருகாமையில் வந்துவிட்டோம்? யாங்கள் எந்தகாலத்தில் எமது தேசத்திற்குப் போவது? இன்னம் என்னென்ன அபாயம் நேரிடுமோ? யாரறிவார்கள்?

வழிப்போக்கன்:—நீங்கள் அவ்விதமாய் விசனப்படவேண்டாம், நீங்களிருவரும் எமது தேசத்தில்வந்து சுகமாயிருப்பீர்கள். உங்களுக்கு என்னென்ன வேண்டுமோ அவையனைத்தும் யானே உமக்கு சித்தஞ்செய்து தருகிறேன். அவ்விடத்தில்வந்து உமது ஆயுள்வரையிலும் சுகஜீவியா யிருப்பீர்கள்.

விவேகானந்தன்:—சரி! அவ்விதமே வருகிறோம் குணரத்னம் இவர் மிகவும் உத்தமராயிருக்கின்றார். நாம் இனி நமதுதேசத்திற்குச் செல்வதென்றால் முடியாத காரியமா யிருக்கின்றது. உனது இஷ்டமென்ன?

குணரத்னம்:—சரி! அவ்விதமே சென்றிருப்போம்.

வெண்பா.

நல்லாரைக்காண்பதுவும் நன்றேநலமிக்க
நல்லார்சொற்கேட்பதுவும் நன்றே—நல்லார்
குணங்களுரைப்பதுவும் நன்றேயவரோ
டிணங்கியிருப்பதுவும் நன்று.

என்பதுபோல உத்தமர் ஒருவர்க்காக வரும்படியான நன்மை அவர்களைச் சார்ந்தவர்களனைவருக்கும் அந்த நன்மையுண்டாகும், அவ்விதமே இந்த உத்தமர் நமக்காக வெகு நன்மைபுரிந்து காப்பாற்றுவாரென்பது உண்மையேயாகும் ஆகையால் யாம் இவருடனே யாம்சென்று இவர்தேசத்தில் ஜீவித்துக் கொண்டிருப்போம். என்றுரைத்தனள். விவேகானந்தனும் சம்மதப்பட்டு வழிப்போக்கனுடனேபோயினர். அம்மூவரும் ஒருமனதாய் யாதொரு அச்சம்பயமில்லாமல் மனோல்லாசமாய்ப் போய்க்கொண்டிருந்தனர். அச்சமயம் "வென்றேன் விதியேயென்றிருந்தால் அன்றே நீக்குற்றகாரணம் போல" ஓர்மதயானை வீறிட்டலறி அந்தமலை யடிவாரத்தின் ஓரமாய் ஓடிவரும்போது, அம்மூவரும் மனமிரண்டு ஒருவர்போனவழி ஒருவருக்குத் தெரியாமல் அங்கிருக்கும் மலைசாரலின் கிளைவழிகளிற்பிரிந்தோடிப்போயினர், ஆனால் வழிப்போக்கன் மாத்திரம் தனது தேசத்தின் கிளைவழிமார்க்கமாய் ஓடிப்போனான்.

விவேகானந்தன் வெகுதூரம்போய் திரும்பிப் பார்த்தவுடனே வழிப்போக்கனையும் காணவில்லை குணரத்னத்தையும் காணவில்லை. என்னசெய்வான் பாபம் யாதொன்றுந் தோற்றவில்லை. சிலநேரம் உட்கார்ந்து கொண்டழுதுக் கொண்டிருந்தனன் தன்னைத்தேற்றுவார் யாரொருவருமில்லை. "அழுதாத் துடித்தாலும் ஆர் தீர்ப்பாரென் கவலை" என்னுந் தன்மையாய்த் தன் மனதைத்தானே தேற்றிக்கொண்டு எழுந்திருந்து அங்கிருக்கும் கானாற்றில் முகங்கழுவிக்கொண்டு இளைப்பாறி சற்றுநேரம் யோசித்து ஈதென்ன விபரீதம் பட்டவிராவிற்படும் கெட்டகுடியே கெடுமென்பதுபோல சதாகாலமும் நமக்குக் கஷ்டமாகவேயிருந்தால் எப்போதுதான் நாம் சுகப்படுவது சிச்சி! நாம் முன்ஜனனத்திற்செய்த தீவினைப்பயனிவ்விதமா யமைந்ததெனின் இனியாம் எவர்களை வெறுப்பதென்று மனசஞ்சலமுடையவனாய் அந்தக் கானக மார்க்கமாகவே போய்க்கொண்டிருந்தனன். யானைக்கு பயந்தோடிய மூவர்களில் குணரத்னமும் வெகுதூரம் ஓடிநடக்க சக்தி இளைப்பினால் மூர்ச்சையாய் வீழ்ந்துவிட்டாள். பிறகு கொஞ்சநேரம் பொறுத்து தானே எழுந்து நாற்புறமும் திரும்பிப் பார்த்து, விவேகானந்தனைக் காணாமல் விசனமாயழுது, தன்னைத் தேற்றுவாரில்லாமல் "எழுதாகுறை யழுதால் வருமா" என்பதுபோல நாம் முன்ஜனனத்திற்புரிந்த ஊழ்வினைக் கிசைந்தபடியே நாம் இராஜபுத்திரியா யிருந்தும் யாதொரு அணையுமில்லாமல் கானக

வாசிபாயலையும்படி யாயிற்றே இனி என் செய்வதென்று மனவிசார மாய் அக்கானக மார்க்கமாகவே போயினள்.

அவ்விதமாய்ச் சதிபதி யிருவரும் ஒருவரையொருவர் பிரிந்து கானகத்திற்றானே அலைந்து கொண்டிருந்தனர் முன்பு இவர்களுடன் துணையாய்வந்த வழிப்போக்கன் தனது தேசத்திற்சென்று மனைவி மைந்தர் சுற்றத்தாரைக்கண்டு மனமகிழ்ந்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்து, தான் அனுபவித்த கஷ்டநிஷ்டூரமனைத்தும் புகன்று இனி உமது புண்ணியவசத்தினால் தப்பிப்பிழைத்து வந்தேனென்றுசொன்னான். அவ்வார்த்தையைக் கேள்வியுற்றோரனைவரும் ஆச்சரியமடைந்தவராயிருந்தனர் வழிப்போக்கனுக்கு மாத்திரம் தன்னுடன் துணையாய்வந்த விவேகானந்தன் குணரத்னம் எவ்விதமானார்களோ யானையாலிறந்தார்களோவென்று மனவிசார மடைந்தவனாயிருந்து சிலநாள் சென்றபிறகு மறந்துவிட்டு, கவலையற்றிருந்தனன். ஆனால் சில சமயம் சிநேகவாஞ்சையால் அவர்களை நினைந்துநினைந்து பரிதாபமாய் தனது உற்றாருடன் சொல்லிக்கொண்டிருப்பான்.

இங்ஙனம் இவ்விதமாயிருக்கையில் குணரத்னம் கானகமார்க்கமாகவே போய்க்கொண்டிருந்தனள். வெகுதூரஞ் சென்றபிறகு ஓர் நந்தவனம் காணப்பட்டது அங்குசென்று நாற்புறமும் சுற்றிப்பார்க்கையில் வீடுகளாகவும், மனிதர்களெல்லாங் குத்துக்கல்லாகவுமிருந்தன, குணரத்னம் ஈதென்ன காக்ஷியென்று அங்ஙனம் சிலதூரம் சென்றபிறகு ஓர் கோட்டை காணப்பட்டது. அதனுட்புறமாய் ஓர் வழிகாணப்பட்டது அம்மார்க்கமாய்ப் போய்க்கொண்டிருக்கையில் ஓர் அழகியபெண் தண்ணீர் குடமெடுத்துக்கொண்டு போயினள். குணரத்னம் ஆச்சரியமடைந்து ஈதென்ன கண்காக்ஷி இது தேசத்தைப்போற் காண்கிறது ஆனால் மனிதர்களெல்லாம் கல்லாய்ச் சமைந்திருக்கும் காரணமென்ன? எங்குபார்த்தாலும் சந்தடியில்லாமலிருக்கையில் இந்தப்பெண் தண்ணீர் குடமெடுத்துக்கொண்டு எங்குசெல்கின்றாள், பார்ப்போமென்று அவளுக்கும் தெரியாமல் ஓர்பெரிய ஆலவிருக்ஷத்தின் கிளையிலமர்ந்து பார்த்துக் கொண்டிருந்தனள்.

தண்ணீர் குடமெடுத்துச் சென்றபெண் சிலதூரஞ்சென்று ஓர் தாமரைத் தடாகத்திலிறங்கி ஜலங்கொண்டு வருகலாயினள். குணரத்னம் அவளைக்கண்டு ஈதென்ன ஆச்சரியம்? நாம் இந்த ஆலவிருக்ஷத்தின் கிளைமீதிருந்து பார்க்குமிடமெங்ஙனும் மனிதசஞ்சாரமேயில்லையே, இந்தப்பெண் ஜலமெடுத்துக்கொண்டு எங்கு செல்கின்று

ரொன்று பார்த்துக்கொண்டேயிருந்தனன். அந்தப்பெண் கோட்டையின் வாசற்படியில் வந்துநின்றாள். இன்னொரு பெண்வந்து அந்த தண்ணீர்குடத்தை வாங்கிக்கொண்டு மற்றொரு குடத்தைக் கொடுத்தனுப்பினாள். குணரத்னம் இதனைக்கண்டு யாதொன்றுந்தோற்றாமல் இங்குநடந்த விசேஷமென்ன கவனிக்கவேண்டுமென மதித்திருந்தனன்.

அந்தக் கோட்டையின் அருகிலுள்ள அகழியில் ஓர் வெளிச்சமுண்டானது அங்கு உற்றுப்பார்த்துக் கொண்டிருக்கையில் வெளிச்சம் மறைந்துபோனது, இவையனைத்துங் கண்ணுற்ற குணரத்னம் யோசிக்கின்றான். இங்கு என்னமோ ஓர் புதுமையாகக் காண்கிறது இதனைக் கவனிக்கவேண்டுமென்று யோசித்தான். அங்குசென்றால் யாதேனும் தீங்கெய்துமோவென மனமிரண்டு விருக்ஷத்தை விட்டிறங்குவதற்கும் மனமிரண்டு அங்ஙனமேயிருந்தனன் பசியும் அதிகரித்தது விருக்ஷத்திலிருந்து இன்னும் இங்கு நடப்பவையனைத்துங் கவனிக்க வேண்டுமெனும் விருப்பத்தினால் விருக்ஷத்தின் மீதிருந்தபடியே நாற்புறமும் சுற்றிப்பார்த்துக் கொண்டிருந்தனன். அந்திப்பொழுதானபடியால் அந்தக்கோட்டை முழுதும் காந்தவிளக்குகளின் ஜோதிகாணப்பட்டது. கோட்டைவாசலில் மிகவும் அழகான இரண்டு பெண்கள்வந்து உலாவிக்கொண்டிருந்தனர்.

இவையனைத்துங் கண்ணுற்ற குணரத்தினத்திற்கு யாதொன்றுந்தோற்றவில்லை பொழுது விடிந்தபிறகு போய்விசாரிப்பதே நன்மையெனக்கருதி அவ்விருக்ஷத்தின் கிளைமீதே சயனித்திருந்தனன். என்றாலும், மனபயங்கரத்துடன் நித்திரையில்லாமல் பலவிதமாய் விசனமாயிருந்தனன்.

அருணோதயமாச்சுது சூரியனும் தனது கிரணங்களுடனே பிரகாசித்துக்கொண்டு புறப்படலாயினன் அப்போது குணரத்தினத்திற்கு இரவுமுழுமையும் விழித்திருந்த நித்திரை மயக்கத்துடன் பசியுமதிகரித்ததினால் ஆகிறகாரியம் ஆகட்டும் இரண்டிலொன்று செத்தாலும் சரி பிழைத்தாலும் சரி நாமிருந்துதா னென்னசுகம், இறந்தாலும் நஷ்டமென்ன இருந்து கஷ்டப்படுவதிலும், இறந்து மறுஜனன மெடுப்பதே நலமெனக்கருதி மனந்துணிந்து தனது சுயரூபமாகிய பெண்வேஷமானாள். அங்கிருந்து கோட்டைக்குப் போகவேணுமெனமதித்து, விருக்ஷத்தை விடுத்திறங்கினாள். அந்தப்பெண்களிருவரும், கானாற்றிற்சென்று ஸ்நானபானஞ் செய்துக்கொண்டிருக்

தனர். குணரத்னம் அவர்களைத் தேடிக்கொண்டு போயினன். தான் கவனித்த இரண்டு பெண்களையும் காணவில்லை. குணரத்தினத்திற்கு உயிரிருக்குமென்று கொஞ்சமும் நினைக்கவில்லை. "தன்னுயிரை பெண்ணுதக் கூராளுக்கெதிராவி தரமெலா மொருதுரும்பு" என்ற வாக்கியத்தை யநுசரித்து நமது ஆவி இத்தினமே போனாலும் உத்தமமேயாகும் குளிரும் ஜுரமும் உடலோடொழிந்தவிதமாய் கஷ்ட நஷ்ட துயரமனைத்தும் உயிரோடொழியுமென்று மதித்து அந்த கோட்டையினுட்சென்று பார்க்கும்போது ஆங்காங்கு மாடமாளிகை கூட கோபுரங்களும், அழகிய வீதிகளும் காணப்பட்டது, யாதொரு மனிதசஞ்சாரமில்லாமல் கதவுகளெல்லாம் திறக்கப்பட்டிருந்தன, ஒவ்வொரு வீதிகளிற்சென்று பார்த்தால் சிலர் படுத்திருப்பதுபோலும் சிலர் எழுந்திருப்பதும், சிலர் நின்றிருப்பதுபோலும், சிலர் ஒருவரோடொருவர் கைபிடித்திழுப்பதுபோலும், சிலர் சாப்பிடுவதுபோலும் இவ்விதமே பற்பலவிதமாய்க் குத்துக்கல்லாய் காணப்பட்டார்கள். இவையனைத்தும் பார்த்துவிட்டு இன்னும் கொஞ்சதூரம் போய் பார்க்கையில் ஓர்விதமான சுழல்காற்றுண்டாகியது. அந்தக் காற்றின் வேகத்தினால் குணரத்தினம் திகைத்து திப்ரமையடைந்து ஓர் மாளிகையினுட்சென்றுவிட்டான். அங்கு எங்குபார்த்தாலும் கண்ணாடிகதவுகளும் தங்கமுலாம்பூசிய சித்திரப்பதுமைகளும், நிலைக்கண்ணாடிகளுமாய்க் காணப்பட்டது. இதனைக்கண்ணுற்ற குணரத்னம் யாதொன்றும் கவனிப்பதற்கில்லாமல் எங்குந்தன்னைப்போன்ற உருவங்கள் காணப்படுவதினாலும் குளிர்ந்தகாற்று வாடைவீசுவதினாலும் யுக்ஷோற்சாக மதிகரித்து, இனி நமக்கு யாதொரு கஷ்டநஷ்டமுமணுகாமல் பகவான் காப்பாற்றுதலாயினமெனும் பேராசையை முன்னிட்டு மிகவும் ஆனந்தமாய் மாளிகையினுட்சென்று பலவிடத்திலும் பார்த்துக்கொண்டு வருகையில் ஓரிடத்தில் சர்க்கரையும், பாதாமை பருப்பும், திவராக்ஷிப்பழங்களு மிருந்தன. அதைக் கண்டவுடனே குணரத்னத்திற்கு மனமகிழ்வானதைப்பற்றி அளவிட்டுச் சொல்வதற்கு முடியாமலிருந்தன. ஒருபக்கம் முந்திரிப்பருப்புகளும், சாரப்பருப்புகளுமிருந்தன. அவையனைத்தும் குணரத்தினம் எடுத்துக்கொண்டுபோய் அங்கிருந்த ஓர் சோபாவின்மீது உட்கார்ந்து பசிதணிய புசித்துக்களைதெளிந்து, அந்த சோபாவின்மீதே சயனித்து நித்திரைசெய்திருந்தனன்.

இங்ஙனம் இவ்விதமாயிருக்கையில் முன்னம் தண்ணீர்க்குச் சென்ற அவ்விரண்டு கன்னிகைகளும் அம்மாளிகையில் வந்து குண

ரத்னம் சயனித்திருக்கும் மஞ்சத்தின் அருகிலுள்ள வெண்கலகடா ரத்தில் வார்த்துவிட்டுப் போயினர். ஆனல் குணரத்னம் சயனித் திருந்ததை கவனித்திலர். நித்திரைசெய்திருந்த குணரத்னம் விழித் தெழுந்து பார்த்தனள். அகஸ்மாத்தாய் அருகிலிருந்த வெண்கலத் தொட்டியில் ஜலமிருப்பதைக்கண்டு ஆச்சரியமடைந்து, இங்குஎன்ன கண்காக்ஷியோ பூதமிருக்கின்றதோ தெரியவில்லையேயென்று இரண்டு கண்களையும், மூடிக்கொண்டு அங்கிருந்த வெள்ளை வஸ்திரத்தை யெடுத்து உடல்முழுதுந் தெரியாமல் உச்சியிலிருந்து உள்ளங்கால் வரையில் வஸ்திரத்தால் போர்த்துக்கொண்டு சயனித்துக் கொண் டாள். அவ்விதமே சற்றுநேரத்திற்கெல்லாம் நித்திரைபோய் விட் டாள். அவ்விதமிருக்க, ஜலங்கொண்டுவரப்போன இரண்டு கன்னி யர்களும் தாங்கள் கொண்டுவரும் ஜலத்தைக்கொண்டுவந்து வெண் கலத்தொட்டியில் வார்த்தார்கள் அப்போது சயனித்திருந்த குணரத் னத்தைக் கவனிக்காமல் போய்விட்டார்கள்.

சற்றுநேரம் பொறுத்து குணரத்னம் மெல்லென எழுந்துபார்த் தனள். வெண்கலத்தொட்டியில் ஜலம் நிறைந்திருந்தது. அதனைக் கண்டு ஈதென்ன மாய்கையோ தெரியவில்லையென்று அந்த ஜலத்தில் கொஞ்சமெடுத்து குடித்தனள். அது மிகவும் இனிமையாயிருந்தது. அதனல் மனமகிழ்ந்து இனி நமது உயிரிருந்தாலும் சரி இறந்தாலும் சரியென்று எழுந்து வென்கல தொட்டியிலிருக்கும் ஜலத்தினல் ஸ்நானபானஞ்செய்து ஆடை ஆபரணங்களை யணிந்துகொண்டு அம் மாளிகையின் நாற்புறமுஞ் சுற்றிப்பார்த்துக்கொண்டு வருகையில், ஓர் புறமாய் வழிதோற்றக்கண்டு அங்ஙனம் சென்று தெருவழியாய்ச் சென்றுள். அவ்வீதிகள்தோறும் ஜனங்கள் வாசஞ்செய்வதுபோ லும், உட்கார்ந்திருப்பது போலுமே கல்லுருவாயிருந்தன. இன்னுங் கொஞ்சதூரம் சென்றுப்பார்த்தனள். அங்ஙனம் சண்டை செய்வது போலும், தலையறுந்து கையொடிந்து, காலொடிந்து வீழ்ந்திருப்பது பார்த்துவிட்டு, ஈதென்ன எங்குபார்த்தாலும் கற்சிலை உருவங்களாக வே விளங்குவதென்னவென்று யோசித்துக்கொண்டு மனந்தெரியத் தைவிடாமல், அந்நகரமுழுதும் சுற்றிக்கொண்டிருந்தனள்.

இங்ஙனம் இவ்விதமாயிருக்கையில் இரண்டு கன்னியர்களும் தண்ணீர் குடமெடுத்துக் கொண்டுவந்து வெண்கலத்தொட்டியைப் பார்த்தவுடனே இளையவளாகிய விரதபூஷணியானவள் தனது தமக் கையாகிய குணபூஷணிக்குச் சொல்லுகின்றுள்.

விரதபூஷணி:—அக்கா! இத்தனைநாளாய் நமது பூஜைக்கு விக்கினம் நேரிடாதபடி யிருந்தது. இச்சமயம் யாதோ இடையூறெய்தும் போலிருக்கின்றனவே.

குணபூஷணி:—தங்கா! நீ யாதொன்றுக்கும் அஞ்ச வேண்டாம். "முயற்சியுடையோ ரிகழ்ச்சியடையா ரென்பதுபோல" நாம் கொஞ்சம் முயற்சியாய் விரதபங்கம் செய்யாமல் பூஜையை நடத்திக்கொண்டிருந்தோமானால் நடக்கிறகாரியம் நடக்கும்.

விரதபூஷணி:—சரி! அப்படியானாலும் இந்த வெண்கலத்தொட்டியின் ஜலத்தை கீழேகொட்டியவர் யார். ஸ்நானஞ்செய்ததுபோலிருக்கின்றதே.

குணபூஷணி:—இது ஏதோ சூதாயிருக்கின்றது. இந்ததேசம்பாழாகி சகலரும் கல்லுருவாகி நின்றார்கள். நாமிருவரும் மந்திரபலத்தினால் தப்பித்துக் கொண்டிருக்கின்றோம். மற்றவர் யாதொருவருமில்லை. அவ்விதமிருக்க இந்த வெண்கலத்தொட்டி ஜலத்தில் ஸ்நானஞ் செய்தவர் யார்? இதனுண்மை எனக்கு இன்னதென்றும் விளங்கவில்லையே. இதைப்பற்றிதான் எனக்கு சந்தேகமாயிருக்கின்றதே.

விரதபூஷணி:—ஆம்! ஆம்!! அதுதான் எனக்கு சந்தேகமாயிருக்கின்றது. அதையான் கவனிப்பதற்கு முடியவில்லை.

குணபூஷணி:—அம்மா! நாம் வேறுவிதமாய் யோசிக்க வேண்டியதில்லை. யாவரோ வழிப்போக்கர் இந்ததேசத்தில் வந்திருப்பது போற் காணப்படுகிறது அதனாலேதான் அவர்கள் இங்குவந்து இவ்வளவு தைரியமாய் ஸ்நானபானஞ்செய்து போயிருக்கின்றனர்.

விரதபூஷணி:—நீ சொல்வது சரிதான்! அப்படியிருந்தவர் இங்குதானே இருக்கவேண்டும் காணாமல் மறைவதென்ன?

குணபூஷணி:—வருவதற்கும் இந்தவிடம் எவ்விதமாய்த் தெரியும் ஈதென்ன ஆச்சரியமோ தெரியவில்லையே.

விரதபூஷணி:—எனக்கும் அப்படித்தானிருக்கின்றது. ஆனால் யாம் கொஞ்சநேரம் நமது தேசத்தைச் சுற்றிப்பார்த்துக் கொண்டு வருவோம்.

என, புகன்றவை வினவிய குணபூஷணியும் அவ்விதமே நன்றெனச்சம்மதித்து இருவருமாய்ப் பிரயாணமானார்கள் குணரத்னம்

அந்த தேசமுழுமையும் சுற்றித்திரிந்து வேடிக்கைப் பார்த்துக் கொண்டு ஓர்வீதியில் தனியாய் வருகையில், விரதபூஷணியும் குணவதியும் பார்த்து விட்டார்கள. அச்சமயம் குணரத்னம் யாதொரு அச்சம் பயமில்லாமல் தனது சுயரூபமாகிய பெண்வேஷமாயிருந்தனர். விரதபூஷணியும், குணவதியும் ஆச்சரியமடைந்து, அருகிற் சென்று விசாரிக்கலாயினர்.

விரதபூஷணி:—அம்மா! தாங்கள் யார்? தாங்கள் வசிப்பது எங்கே? யாதுகாரணமாய் இங்ஙனம் தனியாய் வருகலாயினர்?

குணரத்னம்:—அம்மா! யான் இராஜகுமாரத்தி, எனது மணாளனும் யானும் தனியாய் வருகலாயினோம். அவர் என்னுடன் கானகவாசியாய் வந்தனர். ஓர்யானை துடிவந்ததினால் அதனைக்கண்டு யாங்களிருவரும் மனமிரண்டு ஒடி ஒருவரையொருவர் பிரிந்து யானிவ்விதமாய்த் தனியாய் வருகலாயினேன்.

விரதபூஷணி:—அக்கா! பார்த்தனையா? யாம் என்னென்னமோ பலவிதமாய் ஆலோசித்து மனமிரண்டிருந்தேன், இவளும்நம்மைப் போன்ற ஸ்திரீயாயிருக்கின்றாள். ஆனால் விதிவசம் யாரைவிடுத்தது. ஆனால் இனி நற்காலம் வருமென்றே நம்புகின்றேன் நமக்குபகவான் சகாயஞ்செய்வார். அம்மா! உனது பெயரென்ன.

குணரத்னம்:—என்பெயர் குணரத்னம்.

விரதபூஷணி.—நல்லது நீயும் எங்களுக்குத் துணையாயிருப்பாய்.

குணரத்னம்:—அம்மா! நீ சொல்வது உண்மைதான் மனிதசஞ்சாரமில்லாதவனத்தில் நீங்களிருவர் மாத்திரமிவ்விதமாய் தனியாயிருக்கும் காரணமென்ன?

விரதபூஷணி:—அம்மா! எங்கள் குறையை வினவிடில் மண்ணும்மரமுங் கண்ணீர்த்ததும்பிக் கதறி யழுதிடுமெனின் யின்னேனாலும் விளம்பத்தக்கதோ?

குணரத்னம்:—ஆ! அப்படியா? ஒவ்வொருவருக்கும் இவ்விதமெல்லாம் கஷ்டமிருக்கிறதோ? சரி! உங்களுக்கு இத்தகைய கஷ்டகாலம் வந்தகாரணமென்ன[ அதைகொஞ்சம் விபரமாய்ப் புகல்வாய்.

விரதபூஷணி:—அம்மா! யாங்களிருவரும் சகோதரிகள் எமதுதாய் இறந்துபோகும்பிடத்து யான் ஒருவருஷத்து குழந்தை எனது

சகோதரி இரண்டு வருஷத்திய குழந்தை எமது தந்தையை அவந்திபுரியரசன் தனது இராஜரீகத்தின்மீதும் விருப்பமில்லாமல் தாயில்லா குழந்தையாகிய எங்களைப்பார்த்து விசனப்படுவதுமாயிருந்தனர். மந்திரிபிரதானியர் கவனித்து அரசனுடைய மனம் வேறுபட்டதற்குக்காரணம், மனையாளின்றி மனவருத்தமென்றெண்ணி, ஓர் பெண்ணை அவருக்கு மணஞ்செய்து வைத்தனர். அவளோ மஹா துன்மார்க்கி கல்நெஞ்சமுடையவள் அவளைக்காணும்போதே எங்களிருவருக்கும் பயங்கரமாயிருக்கும், நினைக்க நினைக்க, யமதரிசனமாகவே யிருக்கும். என்ன செய்வோம்? ஆனால் எமது தந்தை தாயற்ற குழந்தைகளாச்சுதேயென தனது இரண்டு கண்களைப்போல மதித்து கண்ணிமைபோலக் காப்பாற்றிக்கொண்டு "எங்கள் இருவரையும்" எமது தாயைப்போல வளர்த்துக்கொண்டு வந்தனர். இதனைக் கண்ணுற்ற எமது சிறியதாயார் பொறாமைகொண்டு எங்களை மிகவும் துன்பஞ்செய்துக் கொண்டிருந்தனள். அதைச்சகியாத யாங்கள் துயரப்பட்டழுதால், எமது தந்தை! சிறியதாயார்மீது கோபித்து தாயற்றபிள்ளைகளை இவ்விதமாய் ஹிம்ஸைசெய்தால் பாபமல்லவோ துன்மார்க்கியென தூஷிப்பார். அதனாலே எமது சிறிய தாயார் மனங்கொதித்து கண்ணீர்சொரிந்து அழுதுக்கொண்டிருப்பாள். இவ்விதமே நாலைந்து வருஷம் வரையிலும் காலங்கழித்திருந்தோம். அதன்பிறகு, எங்களுக்கு வீட்டுவேலை செய்யும்படியாய் கற்பனைசெய்துக் கொண்டிருப்பாள். எமது தகப்பன் கேட்டால் பெண்பிள்ளைகளுக்கு வீட்டுவேலைகற்பிப்பதும் ஆண்பிள்ளைகளுக்கு புத்தபயிற்சி கற்பிக்கச் செய்வதும் உத்தமமேயல்லாமல் கெட்டதென்று நினைக்க வேண்டாமென்று பற்பல விதமாகிய கிளைகதைகளைச்சொல்லி சமாதானப் படுத்திவிட்டு, எங்களுக்கு சமயல்செய்யும் பாகமும் பதார்த்தங்கள் செய்யும் விதமும் கற்பித்து தாதிகளைப்போல கஷ்டப்படுத்திக் கொண்டிருந்தனள்.

இவையனைத்துஞ் சகியாமல் எங்களுக்குத்துணையாக எமது தந்தை எமது சிறியதாயார்க்கு என்னென்ன விதமாய், பரிதாப வார்த்தைகளைச் சொன்னாலும் கல்மனதுடைய காதகி கொஞ்சமும் நினைப்பதில்லை, அதனால் யாங்கள் மனந்திகைத்து, இனி எவ்விதமாய் ஜீவிப்பதென்று விசனமாய் மனமெலிந்திருந்தோம். அந்தசமயத்தில் எமது தந்தை விசனமாய் நாம் இந்த துன்மார்க்கியிடத்தில் பெண்

களைவிட்டு வைத்திருந்தால் எவ்விதமாயினும் கொன்றுவிடுவாரென மதித்து எங்களை ஆண்பிள்ளைகளைப்போல ஆடை ஆபரணங்களாற் சிங்காரித்து தன்னுடனே அரண்மனையில் வைத்துக்கொண் டிருப்பதும், அவர் போஜனத்திற்கு வரும்போது எங்களையும் அழைத்துக் கொண்டு வருவதும் போஜனஞ் செய்யும்போது எங்களையும் துணையாய் வைத்துக்கொண்டு அன்னம் புசிப்பதுமாயிருப்பார் இவ்விதமாகவே எங்களுடைய காலங்கழிந்து வந்தன.

இவ்விதமிருக்கையில் நானும் எனது சகோதரியும் பருவதிசையடைந்தோம். எமது தந்தை எங்களுக்காக ஓர் கன்னியாமடங்கட்டுவித்து சில தாதிப்பெண்களையும் எங்களுக்குத் துணையாகவைத்து ஜாக்கிரதையாய்ப் பார்த்துக் கொண்டிருந்தனர். ஆனால் சிலசமயம் எமது தகப்பன் எமது தாயை நினைத்து விசனப்படுவார். அச்சமயம் யாங்கள் அவருக்கு மனதைரியம் புகன்று, அஞ்சாதீரென்று அநேக வித நீதிசாஸ்திரங்களை போதித்துக் கொண்டிருப்போம். இவையனைத்துங் கவனித்த எமது சிறிய தாயாருக்கு பொறாமையே துணையாயிருந்தமையால் பகற்காலத்தில் எனக்குத் துணையாயிருந்த தாதிகளை இரகஸ்யமாயழைத்து எங்களைக்காட்டிற் கொண்டுபோய்விடுத்து கொன்றுவிட்டு வந்தால் ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு ஆயிரவிராகன் கொடுப்பதாக வாக்களித்து முன்னதாய் ஒவ்வொருவருக்கும் நூறு விராகன் கொடுத்து அனுப்பினள். அவர்கள் ஏழையான படியால் பணமென்றால் பிணமும் வாயைத்திறக்கு மென்பதுபோல நூறுவிராகனைக் கண்டவுடனே நல்லது கெட்டதென்பதையும், பாபபுண்ணியமின்ன தென்பதையும் கவனியாமல் பணத்தைக்கையில் வாங்கிக் கொண்டு மனமகிழ்ந்து, மயக்க மருந்தினால் செய்த பலகார பக்ஷணங்களை எங்களிருவருக்கும் கொடுத்தார்கள். யாங்களதை வாங்கிபுசித்த கொஞ்சநேரத்தில் மனமயக்கமாகி, மூர்ச்சையாய் வீழ்ந்துவிட்டோம். எங்களை மஞ்சத்தில் படுக்கவைத்து எடுத்துக்கொண்டு காட்டுக்கு வந்தார்கள். இவர்கள் செய்யும் சேஷ்டையெல்லாம் எங்களுக்குத் தெரிந்து மயக்கத்தினால் ஏனென்று கேட்கவும் முடியவில்லை. அந்த துன்மார்க்கிகள். எங்களை காட்டில் கொண்டுவந்து விடுத்து சற்று நேரம் என்னென்னமோ பேசிக்கொண் டிருந்தனர். அருணோதயமாச்சுது, அந்தப்பெண்களனைவரும் திடீரென ஓடிப்போயினர். சூரியனும் பிரசன்னமானான். எங்களுக்கும் மயக்கந்தெளிந்தது, யாங்களிருவரும் மெல்லென எழுந்தோம் களையாயிருந்தது. அருகிலிருந்த தாமரைப்பொய்கையில் ஸ்நானபானஞ்செய்து கரையில் வந்து அங்க

னம் அடர்ந்து செழிப்புள்ள விருக்ஷங்களிற்காய்த்துக் கனிந்திருக்கும் இனிமைசேர் கனிவர்க்கங்களைப் பறித்துப் புசித்துக் களைதெளிந்து, எங்கள் ஊருக்குப்போகும் வழிதெரியாமல் கானக மார்க்கமாகவே வெகுநாள் வரையினும் நடந்துவந்தோம். அந்த சமயத்தில் யாங்க ளனுபவித்த கஷ்டநஷ்டமோ சொல்வதற்கும் முடியாது. பகற்கால முழுதும் வழிநடப்போம், இராக்காலத்தில் மிருகங்களுக்குப்பயந்து விருக்ஷங்களின் கிளைமீதமர்ந்து, நித்திரைசெய்வதும், பசிவேளைக்குக் காய்கனிகளைப் புசிப்பதுமாய் கானகவாசியாய்த் திரிந்து வருகையில் மாடமாளிகை கூடகோபுரந் தோற்றக்கண்டோம், எமது சுயதேச மாகிய அவந்திபுரிக்குதான் வந்து விட்டோமெனும் பேராசையால் வெகு வேகமாய்வந்து பார்த்தோம். இங்கு யாதொரு மனிதசஞ்சா ரமுமில்லா பாழ்தேசமாயிருந்தது என்னசெய்வோம் பயங்கரமாகவு மிருந்தது. இங்கு சகலரும் கற்சிலைகளாயிருந்தனர். ஒவ்வொரு வீடு களிலும் போய்பார்த்தோம், அரிசி பருப்புபதார்த்த வகைகளுமிருந் தது அவைகளை சமைத்துப் புசித்துக்கொண் டிருக்கிறோம், எங்க ளுக்கு இதுதான் சொந்ததேசமாய் தீர்மானஞ்செய்துக் கொண்டிருக் கின்றோம், என்று விரதபூஷணி தமது சவிஸ்தாரத்தையும் சொல்லி முடித்தாள். இவை யனைத்துங் கவனித்த குணரத்னம் ஆச்சரிய மடைந்து அம்மா! யானும் உங்களுடனே வந்துவிட்டேன். இனி நம் மூவருக்கும் இது தான் சுயதேசமென மதித்துக்கொண்டு, சகோதர வாஞ்சையாய் ஜீவித்திருப்போ மென்று சொல்லி அவர்களுடனே இருந்தனள்.

அம்மூவரும் மனோல்லாசமாய் அந்த தேசத்திற்றனே மனோல் லாசமாயிருந்தார்கள். ஓர் நாள் விரதபூஷணி தனது சிறியதாய்செய்த வஞ்சகத்தை நினைந்து சிரித்தனள். குணரத்னம், ஏன் சிரித்தா யென்றுகேட்டாள். விரதபூஷணி தனது விதிவசத்தை நினைந்து சிரித் தேனென்றனள். குணரத்னம் அவளுக்கு வேண்டிய மதியுரைத்து, மனிதராய்ப் பிறந்தவர்கள் ஊழ்வினை சம்பவத்தால் யாதேனும் கஷ்ட நஷ்ட மெய்திடில் அதைப்பற்றி விசனப்படலாமா? எத்தகையோருக் கும் வினையால்வந்த ஜனனமாயிருப்பதினால் ஒவ்வொருவரும் அனுப வித்து தானே தீரவேண்டும், இவ்விதமில்லாமல் மனசஞ்சலப் படுவ தினால் பிரயோசன மென்னவென்று குணரத்னம் சொல்லி அந்த இரண்டு பெண்களையும் தைரியவார்த்தைகளாற் சமாதானப் படுத்தித் தானும் அவர்களுடைய சகோதரியாய் ஜீவித்திருந்தனள்.

---

## Scene 7.

இடம் அவந்திபுரி.

### கதா நாயகர்.

இங்ஙனம் இவ்விதமாயிருக்கையில், அவந்திபுரி யரசன் அருணோதயத்திலெழுந்து ஸ்நானபான நேமநிஷ்டை முடித்துக்கொண்டு பலகாரபக்ஷணம் புசித்துவிட்டு தனது குமாரத்திகளைக் கவனியாமல் அரண்மனைக்குப்போய் இராஜரீகஞ் செய்துகொண் டிருந்தனன். அந்த இரண்டு பெண்களையும் காட்டில் விட்டுவந்த தாதிகள் கொடு நீலியிடம் வந்து, அம்மா! உமது இஷ்டப்படியே அந்தப் பெண்களை கானகத்தில் போட்டுவிட்டு ஓடிவந்துவிட்டோம் என்று சொன்னார்கள். அவ்வார்த்தையைக் கேட்டவுற்ற கொடுநீலி மனமகிழ்ந்து, இனி விட்டது சரியென்று அப்போதே அந்த தாதிகட்கு ஒவ்வொரு ஆயிர வராகன்கொடுத்து அனுப்பிவிட்டாள். அவர்களதை வாங்கிக்கொண்டு இனி இங்கிருந்தால் எவ்விதமாயினும் அரசன் கவனித்து ஆவியை போக்கி விடுவானென மனமஞ்சி, அவரவர்கள் குடும்பத்துடனே அயலூருக்கு ஓடிப்போனார்கள்.

அன்றைய அந்திப்பொழுதில் அரசன் கன்னியா மடத்திற் சென்று பார்த்தபோது எவர்களுமில்லை. தனது புத்திரிகளுமில்லை என்ன செய்வான்? மனந்துடித்தான் கண்ணீர் சொரிந்தழுதான். திடீரென்றோடி தனது மனைவியைப்பார்த்து, பெண்ணே! எனது அருந்தவப் புத்திரிக ளெங்கே யென்றான். அவளும் மனவிசார மடைந்தவள்போல நாயகா? பெண்களை ஜாக்கிரதையாக பார்க்கவேண்டும், தாங்கள் என்னை நம்பாமல் தாதிப்பெண்கள் வசம் ஒப்பித்துவிட்டபடியால், அவர்கள் எவர்களிடத்திலேயோ அனுப்பி விட்டார்கள். இரண்டு பெண்களும் அழகானவர்கள் பருவநிலையடைந்தபிறகு தாய்தந்தை ஜாக்கிரதையாக வைத்துக்கொண்டிருந்து ஒருவனுக்குக் கலியாணஞ்செய்து வைக்கவேண்டும். அப்படி செய்யாதவர்களுக்கு இப்படிதான் முடியுமென்று உபாயமாய்ச்சொல்லி மறைத்து விட்டாள். அரசன் யாதொன்றும் சொல்வதற்கு முடியாமல் மனவிசாரமாயிருந்து விட்டான்.

இங்ஙனம் இவர்கள் இவ்விதமாயிருக்கையில் விவேகானந்தன் முன்பு யானையால் தூக்கப்பட்டு குணரத்னத்தைப்பிரிந்து ஓடி

விட்டாளென்று முன்னமேசொல்லியிருக்கின்றோமல்லவா அவன் கானகமெங்குந்தேடி காதலியைக்காணுமல் மனம் வருந்தி வனவாசியாயலைந்து, அவந்திபுரியில் வந்தனன்.

அந்நகரத்தைக் கண்டவுடனே மனமகிழ்ந்து, இனி இந்நகரத்தில் யாம் சுகஜீவியாய் ஜீவித்திருப்போமெனும் மனமகிழ்வுடன் அரண்மனை யணுகினன். அரண்மனை சேவகன் யாரென வினவினன். யான் இராஜசமுகங் காணவந்தேன் என்று அவனிடம் பரிதாபமாய்ச்சொல்லி அவனால் அரசன் முன்சென்று, தன்னுடைய சவிஸ்தாரமனைத்தும் புகன்றனன். அவந்திபுரியரசன் பரிதாபமடைந்து, அடடா ஈதென்ன பரிதாபம். இத்தகையதாய்க் கஷ்டப்பட்டவனும் உலகிலிருக்கின்றனோவென்று ஆச்சரியமுற்றவனாய், அப்பா நீ என்னிடத்தில் பிள்ளையைப்போல இருப்பாயாகில் யானுனை எனது புத்திரனைப்போல காப்பாற்றுவேனென்றான் விவேகானந்தனும் நன்றெனச் சம்மதித்து, சிலநாள் வரையிலும் தனது மனைவியாகிய குணரத்தினத்தினிட்டு ஞாபகமாயிருந்தனன். அச்சமயம், நகர் சோதனைக்காக தனது மந்திரியுடனே போய்க்கொண்டிருந்த அரசன் விவேகானந்தனையும் தங்களுடன் அழைத்துக்கொண்டு தனது மாளிகைக்கு அழைத்துச் சென்றான்.

விவேகானந்தன் தனது காலவித்தியாசத்தை நினைந்துநினைந்து மனவருத்தமுடையவனாய் விசனமாயிருந்தனன். மந்திரியானவன் விவேகானந்தனுக்கு அன்னமிடச்சொல்லி அவன் புசித்தானபின் அவனை விசாரிப்பதாயினன்.

மந்திரி:—அப்பா! நீயார்? நீவசிப்பது எங்கே? யாதுகாரணமாய் மனவிசாரமுடையவனாய் மனமேங்கக் கொண்டிருக்கின்றாய். உனது மனநிலைமையை என்முன் புகலுவாய்.

விவேகானந்தன்;—ஐயா! யானோ ஆருமின்றிய பரதேசி, என் விதியை நினைந்தால் மண்ணும் மரமுங் கண்ணீர்த்ததும்பிக் கதறியழுதிடுமெனில் மண்ணுலகத்தோர் வினவிடில் விசனசாகரத்திலாழ்வாரன்றோ?

மந்திரி:—அடடா! உலகிலுதித்த ஒவ்வொருவரும் அவரவர்க்குற்ற வினையை அவரவர்களே யனுபவிக்கவேண்டுமல்லாமல் வீணாய் விசனிப்பதற்காகுமோ? அரிச்சந்திரன் பட்டகஷ்டத்தில் ஆயிரத்திலொரு பாகமாகிலும் தாங்களனுபவித் திருப்பீரோ?

விவேகானந்தன்:—ஐயனே! அரிச்சந்திரனுக்கு வந்தகஷ்டத்திலும் யானனுபவித்த கஷ்டமோ சொல்லமுடியாது!

மந்திரி:—ஆ! அப்படியா? அதை கொஞ்சம் விபரமாய்ச் சொல்வீர்.

விவேகானந்தன்:—ஐயனே! யான் அரண்மனையிற்றானே இருந்தால் இவ்வளவு கஷ்டம் வராது மனோகர்வத்தைத் தணிவகித்துப் பறந்தோடிய பஞ்சவர்ணக் கிளியைப்போல பலவித துன்பமடைந்தேன்.

மந்திரி:—அப்படியா? அந்தக்கிளியின் சரிதையைச்சற்று விபரமாய்ப் புகல்வீர்.

விவேகானந்தன்:—சரி! அப்படியே சொல்லுகின்றேன் ஓர் தேசத்தில் ஓர் அரசகுமாரன் அருமையாக ஓர் கிளிப்பிள்ளையை வளர்த்துக்கொண்டிருந்தனன். அதற்கு தினந்தோறும் இனிமையான கனிவர்க்கங்களைக் கொடுத்து வளர்த்துக்கொண்டிருந்தனன். ஆனால் சில சமயங்களில் அந்தக்கிளியை வெளியில் விடுத்துத் தன்னுடன் அன்னம் புசிக்கும்படி செய்வான்? அந்தக்கிளிப்பிள்ளை நெய்யும்பருப்பும் சேர்ந்த அன்னத்தைப் புசித்தவுடனே காய்கனிகளின்மீது விருப்பமில்லாமல் அன்னபதார்த்தம் புசித்துக்கொண்டு வளர்ந்தது. இவ்விதமாயிருக்க ஓர்நாள் சிலபறவைகள் அரண்மனையின் முன்புபறப்பதும் உட்காருவதுமாயிருப்பதைப்பார்த்த அந்தப் பஞ்சவர்ணக்கிளிக்குக் கொஞ்சம் மனோற்சாகம் பெருகி தானும் அவைகளைப்போல பறப்பதற்கு இஷ்டப்பட்டு கூண்டிலிருந்து வெளியேவந்தது. அரசகுமாரன் யாதொரு சந்தேகமுமில்லாமல் கிளிப்பிள்ளை விளையாடுகின்றனவென்று, வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தனன். அச்சமயம் அந்தப் பஞ்சவர்ணக்கிளி, ஜிவ்வென்றெழும்பிப் பறந்தது. அரசகுமாரன் ஆச்சரியமடைந்து, அடடா! ஈதென்ன கண்காக்ஷி? நாம் இத்தனைநாளாய் அன்பாய் வளர்த்து ஓடிப்போய் விட்டதே இனி என்ன செய்வதென்று, விசனமாயிருந்தனன். மறுபடியும் சிலநாள் பொறுத்து மறந்துவிட்டான். இவ்விதமாய் நாளுக்குநாள் விசனம் நீங்கினான்.

பஞ்சவர்ணக்கிளி மனோற்சாகமாய் பறந்து தனது சிறகுகளை விசிறி வெகுவேகமாய் ஆகாயமார்க்கமாய் மேலுக்குப்பறந்தவுடனே பூமியிலிருக்கின்ற யாதொன்றுந் தனக்குத்தெரியாமலிருந்தபடியால் மனபயங்கரமுண்டாகி, ஐயோ என்ன நமக்கெதிரில் யாதொன்றுங்

காணப்பட வில்லையேயென்று விசனித்தது. தான் சதாகாலமும்
நிழலிலிருந்தபடியால் ஆகாயமார்க்கமாய்ச் சென்றதினால் சூரியன்
வெப்பத்தைச் சகிக்காமல் சருகுபோல் துவண்டு துடித்தது, இனி
பறப்பதற்குச் சக்தியில்லை. சிறகை ஒடுக்கி பூமியில் பாய்ந்து மெது
வாய்ப்பறந்து வந்தது.

அருகிலிருந்த ஓர் நந்தவனத்திற்போய் அங்கிருந்த தாமரைப்
பொய்கையிலிறங்கி ஜலத்தைச் சிறகினால் அள்ளித் தெளித்துக்கொண்டு
குளிர்ந்த வாடையின்காற்று வீசுதற்கினிமையாக மனோற்சாகமாய்ச்
சற்று நேரமிருந்தது. அப்பாற்சிலநேரம் பொறுத்துத் தனக்குப் பசி
யெடுத்ததினால் அரசகுமாரன் கொடுத்த பருப்புநெய் அன்னத்தை
நினைந்து விசனப்பட்டது. அவ்விதமாகவே யான் தாய்தந்தையைப்
பிரிந்து தனிவழியாய்வந்து கானகவாசியாயலைந்து அசுரனெடுத்துச்
சென்ற அரசபுத்திரியை அழைத்துச் சென்று ஆழிசஞ்சாரியாய்
அலைந்து திருடரிடஞ்சிக்கி காபிரிகளிடமகப்பட்டு தப்பித்துக்கொண்டு
வருகையில் யானையால் துரத்தப்பட்டு ஒருவரையொருவர் விட்டுப்
பிரிந்து அவளொரு தீவிலும் யானொரு தீவிலுமா யலையலாச்சுதே
யானென்ன செய்வேனென்று விசனமாயழுதனன்.

அவ்வார்த்தையைக் கேள்வியுற்ற மந்திரி மனவிசார முடைய
வனாய் அப்பா! நீ யாதொன்றுக்கும் அஞ்சவேண்டாம் யாதாமொரு
வரும் முதலில் கஷ்டப்பட்டால் பிறகு சவுக்கியமடைவார்கள். துக்க
மென்றபோதே துன்பம் துலையுமென்பது யாவருங்கவனித்த விஷய
மாகும் அஃதன்றி, துக்கத்தை யனுபவித்தவர் துக்கத்தையே யனுப
விக்க மாட்டார்கள். நீயாகிலும் இவ்வளவு கஷ்டப்பட்டு மெலிந்
திருக்கின்றே னென்றாயே உன்னிலும் பதின்மடங்கு கஷ்டநிஷ்டூர
மடைந்து, பிறகு சுகானந்தமாயிருந்த மதியூகியின் சரித்திரத்தைக்
கேட்கவில்லையா? யென்றான். அதைக்கேட்ட விவேகானந்தன் ஆச்
சரியமடைந்து, அப்படியா? ஐயா அந்த மதியூகியின் சரித்திரத்தைச்
சற்று விபரமாய்ப் புகல்வீரென்றான். மந்திரிமனமகிழ்வாய் சரி! அப்
படியே தெரிவிக்கின்றேன் கவனிப்பாயென்று சொல்வதாயினன்.

ஓர் தேசத்தில் மஹா தனவந்தனாயிருந்த ஓர் வைசியன் தனக்
குச்சமானமாகிய பிரபு யாதொருவரும் கிடையாதென் றிருந்தனன்.
அவ்வித தனதான்ய சம்பத்துடைய தனவந்தனுக்கு ஓர் புத்திர
னிருந்தான். அவனோ யாதொருதொழிலும் புரியாமல் சதாகாலமும்
மஞ்சத்தின்மீது சயனித்த விதமாகவே விலையுயர்ந்த பலகாரபக்ஷணத்

னுடன் மதுமாம்ஸ திவ்யான்னம் புசித்துக்கொண்டு தனது வாழ்நாள் வரையிலும் சுகஜீவியா யிருந்தாலும் அவனை ஏனென்று கேட்பதற்கும் எதிரியொருவரு மில்லா திருந்தார்கள்.

அவ்வித மிருந்திடினும் மதியிற் சிறந்தவனுக மஹா சமர்த்தனு யிருந்தனன். இவனுடைய புத்திசாதுர்யத்தைக் கவனித்தவர்கள் இவனுடைய பெயரையே மதியூகியென் றழைப்பதாயினர். அவனுடைய தந்தை தனது புத்திரன் சமர்த்தை வெகுவாய்ப் புகழ்ந்து இனிமேல் நமக்கு யாதொரு சஞ்சலமு மில்லையென சந்தோஷமா யிருந்தனன். அண்டை அயலார்களும் மதியூகியின் சமர்த்தைப் புகழ்ந்து பேசுவார்கள். அவன் கணக்குவழக்கு விபரங்களும் வெகு ஜாக்கிரதையாய்ப் பார்த்துக் கொண்டிருப்பான். அவனுடைய புத்தி சாதுர்யத்திற்கு மெச்சிய அவனுடைய தந்தை இனிநமது புத்திரனுக்கு நிகரான கனக்கப்பிள்ளை காசினியெங்கணுந் தேடினுங் கிடையாதெனமதித்து, அவனுக்குத் திருமணஞ் செய்வதற்காகமதித்து தன்னைப்போன்ற தனவந்தன் குமாரத்தியாகிய ஓர் பெண்ணைக் கலியாணஞ்செய்து மனமகிழ வேண்டுமென மதித்திருந்தனன். ஆனால் தனவந்தர் வீட்டுப்பெண்களுக்கு அழகிற் குறைவில்லை யென்றாலும் ஆசைக்கோ ரளவில்லை யென்னுந் தன்மையாய்த் தெய்வரம்பையைப்போன்ற திருவுருவமைந்த அழகானந்த முகவசீகர தேஜஸமைந்த பெண்களைத் தேடிப்பார்த்துத் திருமணஞ் செய்யவேண்டுமெனக்கருதி தாமதித்திருந்தனன்.

இங்ஙனம் இவர்கள் நிலை இவ்விதமாயிருக்கையில், ஓர்கால் சில நாட்டியப் பெண்களுடனே ஓர் நட்டுவன் அந்த பிரபுவின் வீட்டுக்கு வந்தனன். சகலரும் அந்த நாட்டியப் பெண்களிருக்கும் அழகிற்கும் அவர்களணிந்திருக்கும் ஆடை ஆபரண சிங்காரங்கட்கும் ஆசையுடையவர்களாய் ஆடல்பாடல் சங்கீதகாயனங்களைக்கேட்டு மனமகிழ வேண்டுமெனக்கருதி யிருந்தனர்கள். அருகிலிருந்த மதியூகிக்கும் அந்தப் பெண்கள்மீது காதலுண்டாகி தனது பார்வையை அந்தப் பெண்கள்மீது செலுத்தியவனு யிருந்தபோதிலும், காண்போர் பரிகாசிப்பார்களேயெனும் அச்சமொன்று மனதிலிருந்தது. அதனுல் அவன் ஓர் விதமாய் ஜனத்திரளில் தானுமொருவனு யிருந்தனன். இவன் நிலை இத்தகையதா யிருக்கையில், தனவந்தன் ஜனத்திரள் அபேக்ஷையை அடக்கக்கூடாதெனக்கருதி, அருகிலிருந்த நட்டுவனை யழைத்து, இந்தப் பெண்களுக்கு நீகற்பித்த பரதநாட்டியத்தை நடிக்கச்செய்வா யென்றனன்.

நட்டுவன் மனமகிழ்ந்து வாத்தியத்தைமீட்டி இனிய சங்கீத சாஹித்யம் வழுவுறாமல் சுருதிமீட்டினான். அருகிலிருந்த நடனப்பெண்கள் சுருதிக்கான தாளக்கியானத்துடன் வனமயில்போல நடனஞ்செய்து குயிலினம்பாடுதல்போல தமதினியகுரலொலி தொனிக்கிசைந்த பாடல்களைப் பாடினார்கள். அவர்கள் பாடுமினிமைக்கேட்ட சகலரும் ஆனந்தமாய் வேடிக்கையைப் பார்த்துக்கொண்டிருந்தனர்.

மதியூகிக்குத்தனது மதிமயக்கமுண்டாகி அந்தநாட்டியப்பெண்களின்மீது ஆசையுடையவனா யிருந்தனன். அவன் தந்தையாகிய வர்த்தகன் அவர்களுக்கு வேண்டிய வெகுமதிதந்து அனுப்பி விட்டனன். மதியூகிக்கு அந்தப்பெண்களின் நினைவே கனவாய் விளங்குவதும், பகற்காலத்திலும் எதிர் நிற்பதுபோலவும் விளங்குவதினால் அவன் திடுக்கிட்டு நாட்டியப்பெண்களை தேடிப்பார்த்து அவர்கள் முகதரிசனங்கண்டு மனமகிழ்வோமென்னும் பேராசையால் பெற்றோர்களையும் விடுத்து பிரயாணமாயினான். ஆனால், அவன் இவ்வித நிலையிலிருக்கின்றானென்பது தெரிந்திருந்தால் அவன் தந்தை அந்த நடனப்பெண்களுக்கு மாதசம்பளங்கொடுத்து தன்னிடமே நிறுத்திக்கொண்டிருப்பான். அவர்கள் யாதொருவரும் கவனியாமலிருந்ததினால், மதியூகியின் மனக்குறிப்பை யுணராமல் எங்கேயோ சென்றிருக்கின்றானென்றிருந்தனர். மறுதினம், சில அடிமையாட்களை ஏவி மதியூகியைத்தேடிப்பார்த்து அழைத்துக்கொண்டு வருவீர்களென் றனுப்பினான். அவர்களும் பல இடத்திலுந்தேடியலைந்தும் மதியூகியைக்காணாமல் விசனமடைந்தவர்களாய் வீட்டுக்குத் திரும்பிவிட்டார்கள். அப்பால் மதியூகி நடனப்பெண்கள் எங்கிருப்பார்களோ கண்டுவருவோமென்று மனமகிழ்ந்து தேடிக்கொண்டே வெகுதூரஞ்சென்று கானகமார்க்கமா யலைந்திருந்தனன் அங்ஙனம் ஓர் கிளைவழி காணப்பட்டது. அம்மார்க்கமாய்ச் சென்றபோது ஓர் மலையடிவாரத்தில் ஓர் சந்நியாசியிருந்தார். அவரைப்பணிந்து சுவாமி எனது தேசத்திற்குச்செல்லும் வழிதெரியாம லலைகின்றேனென்றான். அவர் மனமகிழ்ந்து அப்பா! நீயாதொன்றுக்கும் அஞ்சவேண்டாம். இந்தகிளைவழி மார்க்கமாகவே சென்றால் ஓர் நகரந்தோன்றும் அங்ஙனம் சென்று அந்நகரில்வாசஞ் செய்யும் வியாபாரிகளைக் கேட்டால் உனது தேசத்திற்குப்போகும் மார்க்கத்தைக் காண்பிப்பார்களென்றார். மதியூகி அவ்விதமே தன் மனச்சம்மதித்து போய்க்கொண்டிருக்கையில், ஓர் வழிப்போக்கன் அவனுக்குத் துணையாகி அவனுடைய வீட்டிற் கழைத்துச்சென்று,

அங்ஙனம் சிலநாளிருந்து மதிபூஷணை அழைத்துக் கொண்டுபோய் அவ்வூர் வியாபாரியிடத்தில் கணக்குப்பிள்ளை உத்தியோகத்திலமர்த்தினன். இவனுடைய புத்தி சாதுர்யத்தையும் ஞாபக சக்தியையும் கவனித்த அவ்வர்த்தகன் அவனை இன்னுனென்று கவனித்துணர்ந்து மதிபூஷணின் தந்தையைவரவழைத்து அவனுடன் அனுப்பிவிட்டான். இவ்விதமெல்லாம் ஒவ்வொருவரும் தமது கஷ்டகாலத்திற் கிசைக்கபடியே நஷ்டம் வந்தாலும் பகவான் கிருபையால் கஷ்டம்விலகி சுகஜீவியா யிருப்பதற்காகும். அஞ்சவேண்டாமென்று பலவித தைரிய வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டிருந்தனள். இவ்விதமா யிருக்கையில் ஓர்நாள் விவேகானந்தன் அரண்மனையிற் சென்றனன். அரசன் அவனுடைய சுகிர்தாரத்தை விசாரித்தனன். விவேகானந்தன் தனது விதிவசமனைத்தும் விபரமாய்க் கூறி விசனப்பட்டான் அரசனும் அழுபவரைக்கண்டு அழுதிடுவதுபோல தானும் விசனப்பட்டு, இனி நாம் எவ்விதமாய் புத்திரிகளைக் காண்பதென்று தனது குமாரத்திகளை நினைந்து பரிதவித்தான். அருகிலிருந்த மந்திரி சொல்லுகின்றான். அரசே உலகிற்பிறந்த மனிதர்களெல்லொருவரும் அவரவர் கர்மானுசாரத்தின்படியே சுகதுக்க மனுபவிக்கின்றனர்.

அரசன்:—எவர்களாயினும் என்னைப்போற் கஷ்டமனுபவித் திருக்கின்றார்களா?

விவேகானந்தன்:—அரசே! நீங்களாகிலும் புத்திரிகளை மாத்திரம் இழந்ததற்காக விசனப்படுகிறீர் யான் சிறுவயதிலிருந்தே பலவித கஷ்ட நஷ்ட மடைந்து தேசசஞ்சாரியாயலைந்து வனத்தி லகப்பட்ட கன்னியையும் பிரிந்து பரிதவிக்கின்றேனே. இதை விட வேறுகஷ்டம் யாரனுபவித் திருப்பார்கள்.

மந்திரி:—சரி நீங்களாகிலும் ஒருவனுக் கடிமைப்படாமல் சுயார்ஜிதமாய் கஷ்டப் பட்டீர்கள். அயோத்தியா புரியில் மிகவும் கீர்த்திப்பிரகாசமாகவும் தர்மசிந்தனையாகவுமிருந்த அரிச்சந்திரன் தனது அரசுரிமையை விஸ்வாமித்திரனிடங் கொடுத்துவிட்டு, தான் பரதேசியாய் மனைவிமைந்தருடன் அரண்ய மார்க்கமாய்ப் போகுந்தருணம், விஸ்வாமித்திரர்க்காக மனைவிமைந்தனை விற்றுத் தாசன் கடனுக்காகத்தானும் வீரவாகுக் கடிமையாகி மயானங் காவலனாயிருக்கும்போது தனது புத்திரன் சர்ப்பத்தா லிறந்தானென தன் பத்தினி புத்திரனை எடுத்துக்கொண்டு மயானத்தில் வந்து தகனஞ் செய்கையில் தனது மனையாளென்

றென்றுமல் யாரோவென்று மதித்துக் கஷ்டத்தை யுதைத்து மனைவியென்ன தெரிந்து, மனவிசார மடைந்தவனுய் எஜமானுக் குரியவனாகிய காசும் முழத்துண்டும் கொண்டுவந்தால் தகனஞ் செய்வே னென்றுரைக்க சந்திரமதி தன்னை யடிமைகொண்ட காலகண்டனிடம் வந்து கேட்கும் அவன் கொடூமையால் மன்னவ்பாற் சொல்லியானலும் மைந்தனை தகனஞ்செய்வோமென வருகையில் காசிராஜன் பிள்ளையைத் திருடிக்கொண்டு வழியிற் போட்டிருப்பதைக்கண்டு சந்திரமதி மயானத்திலிருந்த தன் மகனை நரியிழுத்துவந்து போட்டதோவென சந்தேகித்தெடுக்க தலையாரிகள் வந்து திருடியென பிடித்துக்கொண்டுபோய் அரசன் முன்விடுத்தார். காசிராஜன் சிரசாக்கினை விதித்தவன், மயானத்தோட்டி சந்திரமதியை அரிச்சந்திரன் கையில் ஒப்பித்து வெட்டென்றக்ஞாபித்தனன். அச்சமயம் அரிச்சந்திரன் மனமெவ்விதமிருக்கும். அதையுஞ் சகித்து வெட்டும்போது விஸ்வாமித்திரன் தடுத்தும், கேளாமல் மறுபடியும் வெட்டும்போது தேவர்கள் கிருபையால் வெட்டியகத்தி பூமாலையாய்க் கழுத்தில் விழுந்தது, அப்போது மனஞ்சகித்து வெட்டுகையில் பரமசிவம் வந்துதடுத்து இறந்த பிள்ளையையும் உயிர்பெறச்செய்து அரிச்சந்திரன் கஷ்டத்தை விலக்கி விஸ்வாமித்திரன் தபத்தில் பாதி கொடுக்கச்செய்து அடிமைத் தனத்தை விலக்கி அரசனாகச் செய்து அயோத்தியாபுரியில் தனது மனைவி மைந்தனுடன் சுக ஜீவியாய் அரசாட்சி புரியும்படி அனுக்கிரகஞ் செய்தார்.

அவ்விதமான கஷ்டநஷ்ட மடைந்தவர்களெல்லாம் சுகமடைந்தார்களே! அவ்விதமே உங்களுடைய கஷ்டமும் விலகி சுகஜீவியா யிருப்பீர்கள்.

அரசன்.—ஐயோ! உலகிற்பிறந்த மனிதர்களில் சிலருக்கு சுகமும், சிலருக்கு அசுகமும் வருவதெனில் ஆச்சரியந்தானே நமக்கு சகல சம்பத்து மிருக்க இந்த இராஜரீகத்திலும் யாதொரு குறையு மில்லாமலுமிருக்க வேற்றரசர் பகையுமின்றி உத்த மனுமிருக்க எனது புத்திரிகள் போனவழியைக் காணுமையால் யான் பரிதவிக்கின்றேனே.

விவேகானந்தன்:—அரசே! யானும் அவ்விதமே மனைவியைப்பிரிந்து மனவிசாரமா யிருக்கின்றேன்.

மந்திரி:—(புன்னகை புரிந்து) நீங்கள் இவ்விதமாய் விசனப்படுகின்றீர்களே புலியும்பசுவும் ஓர் துறையில் ஜலமருந்தி மனமகிழும் நீதி தவறாமையும், அடக்கம், பொறுமை, சாந்தம் தயாளம் முதலாகிய நற்குணம் வாய்ந்து, நிடதபுரியைப் பரிபாலனஞ் செய்யும் நளச்சக்ரவர்த்தி யானவர் புஷ்கரராஜனிடத்தில் சூதாடி நாடு நகரமனைத்து மிழந்து, மக்களையும்பிரிந்து மனையாளுடன் வனவாசியாய்ச் சென்று, காய் கனிகளைத்தின்று காலங்கழிக்கும் போது, ஓர் அன்னப்பக்ஷி எதிரில் வந்தது. அதனைப் பிடிக்க வேணுமெனும் ஆசையால் தனது வஸ்திரத்தை அவிழ்த்து அதன்மேல்போட்டு பிடிக்கச்சென்றான். அந்தப்பக்ஷி வஸ்திரத்துடனே ஜிவ்வென்றெகிரிப் பறந்தோடியது. அச்சமயம் ஆற்றொணு மனசஞ்சல மதிகரித்து உடுத்திய வஸ்திரத்தையும், அன்னபக்ஷி எடுத்துக்கொண்டு ஓடிப்போய் விட்டது. இனியாமென்செய்வது? யென்று விசனப்படும்போது, தமயந்தி தனது வஸ்திரத்தில் கொஞ்சங் கிழித்துக் கொடுத்தாள். நளச்சக்கிரவர்த்தி அந்தவஸ்திரத்தை யணிந்துக்கொண்டு மனையாளுடனே வனவாசியா யலைந்துக் கொண்டிருக்கையில், தமயந்திக்கு நித்திரைவந்தது. அச்சமயம் நளச்சக்கிரவர்த்தியின் தொடைமீது தலைவைத்துக்கொண்டு சயனித்தனள். அச்சமயம் நளச்சக்கிரவர்த்தி தலைக்குயரமாக மணலைக்குவித்து வைத்துவிட்டு மனையாளைப்பிரிந்து தனியாய்ப் போய்விட்டார். தமயந்தி எழுந்து பார்த்து மணாளனைக்காணாமல் வனமெங்கும் அலையும்போது ஓர் சர்ப்பம் காலைச்சுற்றிக்கொண்டது ஓர்வேடன் அந்த சர்ப்பத்தைக்கொன்று தமயந்தியை விரும்பியதால் அவனை அக்கினி பஸ்பமாய்ப் போகும்படி சபித்துவிட்டு வனவாசியாய்ச்சென்று தனது தாய்வீடாகிய விதர்ப்பபுரியிற்சென்று தனது தாய் தந்தையைக்கண்டு தமது காலவித்தியாசத்தைச்சொல்லி பிள்ளைகளிருவரையும் பார்த்துக்கொண்டிருந்தனள். நளச்சக்கிரவர்த்தி கானகவாசியாய்வரும்போது கார்க்கோடகனால் கடியுண்டு தேகங்கறுத்து ரிதுபர்ன ராஜனிடம் சுயம்பாகி வேலையிலிருந்தனர். வீமராஜன் தமயந்திக்கு மறுசுயம் வரமென்று தெரிவிக்க, ரிதுபர்னன் சுயம்பாகியா யிருந்த நளனைத் தேர்ப்பாகனா யமைத்து இருவருமாய் விதர்ப்பபுரியிற் சென்றார்கள். அச்சமயம் நளச்சக்ரவர்த்திக்கு சனி விடுதலையானார். அச்சமயம் நளச்சக்கிரவர்த்தி மனைவி மைந்தர்களைக்கண்டு ஆனந்தங்கொண்டு அவர்க

ளுடனே தமது தேசத்திற்குச்சென்று புஷ்கர ராஜனிடத்தில் சூதாடி நாடு நகரத்தைத் கெலித்துக்கொண்டு பழையபடியே இராஜரீகஞ் செய்துக் கொண்டிருந்தார்.

அவ்விதமாகவே உங்களுக்கும் நற்காலம் வரும் அஞ்சாதிரென்று வேண்டிய தைரியம் புகன்றனன். அவ்வார்த்தையைக் கேட்ட அரசனும் விவேகானந்தனும் ஒருவிதமாய் மனந்தேறியிருந்தனர்.

அப்பால் நாலைந்துநாள் பொறுத்து விவேகானந்தன் மனையாளை நினைந்துகொண்டு அரண்மனையை விடுத்து ஆரண்ய மார்க்கமாய்ச் சென்றனன். அவ்விதமாய்ச் செல்லும்போது ஓர் கிளைவழிதோன்றியது. அம்மார்க்கமாகவே வெகுதூரஞ் சென்றபோது ஓர் நிலைவைக் கலங்கி அங்ஙனம் சென்றான். அச்சமயம் வழியிலிருந்த ஓர் நந்தவனத்தில் ஓர் அழகிய கன்னிகையைக்கண்டு ஆவலுடையவனாய் அங்ஙனமே சற்றுநேரம் மனமயக்கமுடன் நின்றிருந்தனன். அந்தப் பெண்ணும் இவன்மீது ஆசையுடையவளாய் அவனிடத்தில் அன்பாய்ப்பேசி தன்னுடனே அழைத்துக்கொண்டு தனது தேசத்திற்குச் சென்றாள்.

விவேகானந்தன்:—பெண்ணே! நீயும் என்மீது ஆசையுற்றாய் யானும் உன்மீது ஆசையுற்றேன் நம்மிருவர் சம்மதித்திடினும் உனது தாய் தந்தையர் சம்மதிக்க வேண்டுமே, அப்படி சம்மதிக்காவிட்டால் ஆவிக்கபாயமல்லவோ.

எனபுகன்றனன், அவ்வார்த்தையைக்கேட்ட அந்தப்பெண்விசனப்படாதீர், யான் உமது இஷ்ட நாயகியா யிருப்பதற்கு யாதொருவரும் ஆக்ஷேபனை சொல்லார்கள் வருவீரென்று தன்னுடனே அழைத்துக் கொண்டு அரண்மனைக்குச்சென்று அங்கிருக்கும் ஓர் விடுதியிலிருக்கச்செய்து தனது தாதிகளையனுப்பி தனது கருத்தை அரசனுக்குத் தெரிவிக்கும்படி சொன்னாள். தாதிகளால் கேள்வியுற்ற அரசன் மன மகிழ்ந்து விவேகானந்தனை வரவழைத்து, அவனுடைய அழகானந்த முகவசீகரத்தைப்பார்த்து இவனே நமதுபுத்திரிக்குரிய உத்தமபுருஷனென திர்மானித்து சீக்கிரம் தனது மந்திரி பிரதானியரிடத்தில் ஆலோசனைபுரிந்து அவர்களும் சரியென சம்மதித்ததினால் ஓர் சுபதினத்தில் பிராமணர்களை வரவழைத்துத் தமது குலத்திற்கியன்ற விவாஹ சடங்குப்படியே தனது புத்திரியை விவேகானந்தனுக் கலியாணஞ் செய்துவைத்தான்.

அப்பால் விவேகானந்தன் தனது பத்தினியுடனே சிலநாள் வரையிலும் ஏகாந்தமாய் வாழ்ந்திருந்தனன். இவ்விதமாயிருக்கையில் ஓர்நாள் அவன்மனைவியாள் தேகவியாதியினால் மெலிந்திருந்தனள். அச்சமயம் அநேக வைத்தியர்கள் வந்து தம்மாலியன்ற வரையிலும் தகுந்த மருந்துகளைக்கொடுத்தும் சவுக்கியப்படாமல் இறந்துபோனாள். அந்நகரத்தின் வழக்கம்போல இறந்த சவத்திற்கும், விவேகானந்தனுக்கும் ஸ்நானஞ்செய்துவைத்து புதிய ஆடைகளுடுத்தி மணமலர் மாலைகளால் அலங்கரித்து, இன்னும் அந்நகரத்தின் ஜாதியார்கள் என்னென்னவிதமான சடங்குகள் செய்கின்றார்களோ அவையனைத்தும் சரியாய்நடத்தி புஷ்பபல்லக்கின்மீது பிணத்தைவளர்த்தி விவேகானந்தனையும் ஓர் பல்லக்கின்மீது உட்காரவைத்து மேளதாள வாத்தியக் கோஷ்டத்துடனே சகலரும் புடைசூழ மயானத்திற் கழைத்துச்சென்றார்கள்.

இவர்கள் போவதற்கு முன்பாக கல்லறையை வெகுவாய் ஜோடித்திருந்தது. அந்தக்கல்லறை பூமிக்குள் சுரங்கமாய் அமைக்கப்பட்டு அவ்விருந்த கூடங்களுக்கு வழியாயிருந்தது. அந்த சுரங்கத்திற்கு பொன்கதவுகள் போட்டிருந்தது அன்றையதினம், அந்த வாசற்படியில் வாழைமரம், தென்னைமரம், கமுகுமரங்களாற் சிங்காரித்து நறுமணங்வீசும் மணமலர்களால் தோரணங்களிட்டு வெகு வேடிக்கையாயிருந்தது, பிரேதபல்லக்குடனே சகலரும் சுரங்கத்தினுட்சென்றார்கள். அங்கு அநேக கோரிகளுங் காணப்பட்டன. ஆனால், அரசபுத்திரி பிரேதமாகையால் முதலில் தோண்டியிருக்கும் பள்ளத்திற் கொண்டுபோய் வைத்து, அங்ஙனம் செய்யவேண்டிய பிரேத சடங்கனைத்தும் செய்து கல்லறை பள்ளத்தில் பிணத்தை வைத்து, 15-மணங்கு கர்ப்பூரத்தைப்போட்டு அதன்மீது பட்டுவஸ்திரத்தைமூடிமண்ணைத்தள்ளி மூடிவிட்டு கற்களையடுக்கி சுண்ணாம்பு கட்டடமாய் அமைத்து அந்த கோரியின்மீது புஷ்ப தோரணங்களமைத்து சிங்காரித்துக் கொண்டிருந்தனர்.

பகல் 12-மணி ஆனது சகலரும் பந்திபந்தியாய் உட்கார்ந்து அன்னம்புசித்து கைவாய் அலம்பிக்கொண்டு சற்றுநேரம் ஆத்மலாப விசாரணையாய் வேதாந்த சித்தாந்த ஞானசெல்வமனைத்தும் பேசிக்கொண்டிருந்தனர். மாலை 5-மணி ஆனவுடனே சகலரும் பலகார பானம் புசித்து, அவர்களுடைய பிரேதங்கள் புதைக்கப்பட்டிருக்கும் கோரியின்மீது, மூன்று கோதுமை ரொட்டிகளும் ஓர்யானையில்

ஜலமும் வைத்துவிட்டு, பிரேதங்களின் நாயகரை கோரியின் பக்கத்தில் உட்காரவைத்து விட்டார்கள். அவர்கள் விதிவசமேயென்று மனவிசாரமாயிருந்தார்கள். விவேகானந்தனையும் தனது மனையாளின் கோரியின் அருகில் உட்காரவைத்துவிட்டு சகலரும் திடீரென திரும்பிப்பாராமல் வெளியிற்சென்று குகையின் கதவை மூடிக்கொண்டு போய்விட்டார்கள். விவேகானந்தன் திகிலிட்டு அடடா! ஈதென்ன ஆச்சரியம்? நம்முடன் வந்தவர்களனைவரும் நம்மை அழைக்காமல் போய்விட்டார்களே, நாம் என்னமூடத்தன்மையாய் நின்றுவிட்டோமென மனம்பதறி யோடிப்போய் குகையின் கதவைத்திறந்தனன். கதவு திறக்கப்படவில்லை, என்னசெய்வான்? அழுதான் வாயிலடித்துக்கொண்டான். வயிற்றிலறைந்து கொண்டான். பூமியிற்புரண்டழுதான். தன்னைத்தேற்றுவோர் யாருமில்லாதபடியால் தானேயடங்கி சற்றுநேரம் யோசித்தான் யாதொன்றும் விளங்கவில்லை. மறுபடியும் கல்லறையின் அருகில்வந்தான். பசியதிகரித்தது கோரியின்மீதிருந்த மூன்று ரொட்டிகளையும் தின்றுவிட்டு பானையிலிருந்த ஜலத்தையுங் குடித்துவிட்டுப் பசியாறினன், களையும் தெளிந்தது.

அப்பால், சற்றுநேரம் இங்ஙனம் சுற்றிப் பார்ப்போமென்று நினைத்தவனாய்ப் புறப்பட்டான். ஒவ்வொரு கோரியின்மீதும், மூன்று ரொட்டிகளும் ஒருபானையில் தண்ணீரும் இருந்தது. அந்தந்த கோரியின்பக்கத்தில் ஒவ்வொரு ஆண்பிள்ளைகள் ஜீவஹிம்ஸையாய்த் துடித்துப்புரண்டு கொண்டிருந்தனர். அதைப்பார்த்தவுடனே விவேகானந்தன் ஆச்சரியமடைந்து அடடா ஈதென்ன நூதன புதுமையென்று சொல்லிக் கொண்டேபோய் அங்ஙனம் உயிராயிருக்கும் ஒருவனை விசாரித்தனன் அவன் அந்த ஊர்வழக்கத்தைச் சொன்னான்.

விவேகானந்தன்:—ஐயா! செத்தவர்போனால், இருப்பவர்களை ஏன் இவ்வித ஜீவஹிம்ஸையாய்க் கொல்லுகிறார்கள்.

கிழவன்:—அப்பா! உலகத்திற் பிறந்தால் சுகத்தைக் கொடுக்கும் மனையாளிறந்தபோதே மரணமாவதுதான் நன்மை.

விவேகானந்தன்:—ஈதென்ன நூதனபுதுமை. அவரவர்கள் கர்மானுசாரப்படியே அவரவர் வாழ்நாள் குறுகி மரணமடைந்தால் நமக்கென்ன? நாம் உயிருடனே சுகஜீவியாயிருப்பது நன்மையாக கதே.

கிழவன்:—அப்படி நினையாதே, மனையாளில்லாம லிருந்தால், மற்றொரு பெண்மீது ஆசையுண்டாகும், அப்போது விபசாரத்வ

மாகும், ஆகையால் விபசாரத்வம் விபரீதகாலம், பரஸ்திரீகமனம் பரலோக நாசனம், என்றுசொல்லும் பழமொழிப்படியே மனையாளில்லாமலிருப்பதிலும் மரணமாவதே மேன்மை ஆகையால் இந்நகரத்தில் மனையாளில்லாதவர்களை மரணமாகச் செய்வது வழக்கமாகையால், அரசன் உத்திரவுப்படியே இவ்விதமாய்ச் செய்கின்றனர்.

என, அடித்துவிழுந்து பிராணனை விடுத்தனன். இந்த மூடர்களின் செய்கையைப்பார்த்த விவேகானந்தன் சிரித்துக்கொண்டே கல்லறை முழுதும் சுற்றிப்பார்த்துக் கொண்டே செல்வதும், பசியெடுக்கும்போது அந்தந்த கோரியின் மீதிருக்கும் ரொட்டியைத் தின்று பானைஜலத்தைக்குடித்து மலவிசாரமின்றியவனும் நித்திரை வரும்போது சயனிப்பதும் நித்திரைதெளிந்தபோது வழிநடப்பதும், பசியெடுக்கும்போது ரொட்டிகளைப்புசித்து பானைகளின் ஜலத்தை குடிப்பதுமாய் வருகலாயினன்.

அவ்விதமாய்க் குகையோரமாய் வந்துகொண்டிருக்கையில் அருணோதயமானவுடனே சூரியன் வெளிச்சம் தோன்றியது. அதைக் கண்டவுடனே விவேகானந்தன் மனமகிழ்ந்து, அடடா இத்தனை நாளாய் இருட்டறையாகவேயிருந்தது, இன்றையதினம் என்னமோ சூரியகாந்தி தெரிகிறதே இன்னுங் கொஞ்சதூரஞ்சென்று பார்ப்போமென்று அங்கிருந்த கோரிகள் மீதிருந்த ரொட்டிகளையெல்லாம் எடுத்து ஓர் வஸ்திரத்தில் மூட்டை கட்டிக்கொண்டு வெளிச்சமிருக்கும் மார்க்கமாகவே போய்க்கொண்டிருந்தனன்.

அங்ஙனம் கல்கட்டடத்தரையில்லாமல் மணல்தரையாகக்காணப்பட்டது அம்மார்க்கமாகவே போனான் கடற்கரை காணப்பட்டது. அதைக் கண்டவுடனே விவேகானந்தனுக்கு மனம் பூரித்து, இனி நமது கஷ்டகாலம் விலகிப்போனது யென்று மனமகிழ்ந்து தான் கொண்டுவந்த ரொட்டிகளையெல்லாம் யெதிரில் எடுத்து வைத்துக் கொண்டு தனது பசியடங்கும் வரையில் புசித்து தான் கொண்டுவந்த பானைஜலத்தைக் குடித்துவிட்டு சற்றுநேரம் உட்கார்ந்து இளைப்பாறி அங்ஙனமிருக்கும் விருக்ஷத்தின் நிழலில் சற்றுநேரம் சயனித்து நித்திரை செய்து விழித்தெழுந்தனன்.



## Scene 7.

இடம் — கடற்கரை.

கதா நாயகர்.

விவேகானந்தன், மாலுமி, தனபாலன்.

அப்பால் விவேகானந்தன் தான் கொண்டுவந்த பானைஜலத்தில் முகங்கழுவிக்கொண்டு ரொட்டிகளையும் தின்று தண்ணீரைக்குடித்துப் பசியாறினான். தேகமும் கொஞ்சம் சுகமானது அந்த மணல்தரையில் கொஞ்சநேரம் சயனித்து மெல்லென எழுந்து வருகலாயினான். கடலோரத்தில் வந்தனன் கடலலைகளைப் பார்த்துக்கொண்டு கடல்நீரில் கொஞ்சநேரம் விளையாடிக் கொண்டிருந்தனன். அங்ஙனம் ஓர் கப்பல் வெகு தூரத்திலிருந்து வருகிறதைப் பார்த்தான். அதைக்கண்டவுடனே தாயைக்கண்ட சேய்போலும், பசுவைக்கண்ட கன்றைப் போலும் ஆனந்த பரவசமடைந்து, தனது கஷ்டநஷ்ட மனைத்தும் கடலில்போய் விட்டதெனக்கருதி, கப்பல் அருகில் நெருங்கியவுடனே தனது கைக்குட்டையை விசிறினான். இந்த சைகையை யுணர்ந்த மாலுமி யாரோ கப்பல் பிரயாணஞ் செய்வதற்காக வந்திருக்கின்றானென்பதாக மதித்து கப்பலை கரையோரத்திற்கொண்டு ஓர் படகை ஜலத்திலிறக்கி நான்கு படகுக்காரர்களை யனுப்பி, அதோ நிற்கின்ற அந்த பிரயாணியை அழைத்துக்கொண்டு வருவீரென்றனன்.

அவர்களும் அவ்விதமே நன்றெனச் சம்மதித்து படகைக் கடற் கரையில் கொண்டுவந்து விவேகானந்தனை ஏற்றிக்கொண்டு போனார்கள். படகுகப்பல் அருகிற் சென்றவுடனே கப்பல்படியின் மீதேறிப் போய் கப்பலில் உட்கார்ந்தனன். மாலுமி கப்பற்கட்டணங் கேட்டனன். விவேகானந்தனிடமிருந்த நூறு ரூபாயில் இருபது ரூபாயை மாலுமி கையிற்கொடுத்து அலங்கிருதபுரிக்கு டிக்கட்டு வாங்கிக்கொண்டான். படகுக்காரரும் கப்பலிலேறிக்கொண்டு படகில் கயிற்றைப் பிணைத்து இழுத்து கப்பலில் எடுத்துப் போட்டுக் கொண்டார்கள். மாலுமி கப்பலை நடத்திக்கொண்டு போனான்.

இங்ஙனம் இவர்கணிலை இவ்விதமாயிருக்கையில், ஆச்சர்யபுரி யரசன் தனது மந்திரி பிரதானியருடனே உற்றார் உறவின்முறையாருடனே தனது புத்திரியின் விவாஹ சடங்கிற்குரிய சாமான்களனைத்தும் எடுத்துக்கொண்டு அதிகாலையில் பிரயாணமாகி கல்லறையருகில்

வந்து வாசற்படிக்கு செய்யவேண்டிய சடங்கனைத்தும் செய்து கதவைத்திறந்து சகலரும் சுரங்கத்திற்குட் சென்றார்கள். சமாதியருகிலிருந்த விவேகானந்தனைக்காணாமல் ஆச்சரியமடைந்தவராய் அடடா ஈதென்ன மோசமா யிருக்கின்றதே யென்று நாற்புறமுந் தேடிப் பார்த்துங்காணாமல், அடடா! அவன் புதியமனிதனாகையால் சமாதியில் நில்லாமல் நம்முடனே வந்துவிட்டான் போலிருக்கிறதே. இனி என்னசெய்வது? அப்படி வந்துவிட்டாலும் அரண்மனைக்கு தானே வரவேண்டும். மற்றபடி எங்கு சென்றானோ? இன்றைய தினத்திற்குள்ளாவது அவனைத்தேடிப்பிடித்து இழுத்துக்கொண்டுவந்து, சுரங்கத்தின் சமாதியருகில் கட்டிவிட்டு செல்லவேண்டுமெனக் கருதி, பிணத்திற்குரிய சடங்கனைத்தும் செய்துக்கொண் டிருந்தார்கள்.

இங்ஙனம் இவர்கள்நிலை இவ்விதமாயிருக்கையில், மற்றவர்க்கும் அவரவர்கள் பிரேதசமாதிகோரியருகில் சென்றுபார்க்கையில் பிணங்கள்மாத்திரம் செத்துக்கிடப்பதும், மற்றவர்கள் குத்துயிர் கொலையுயிராயிருப்பதும் தவிர கோரியின்மீதிருந்த ரொட்டிகளையும், காணவில்லை, தண்ணீர் குடங்களும் உடைபட்டு பூமியில் விழுந்திருந்தது. இந்த அநியாயத்தைப் பார்த்தவர்களும் ஆச்சரியமடைந்து குத்துயிராயிருக்கப்பட்டவர்களில் கொஞ்சம் பிராணசக்தியா யிருப்பவனைப் பார்த்து விசாரிக்கையில், அவன் இராஜபுத்திரியின் மணாளனாகிய விவேகானந்தன் செய்தவையனைத்தும் விபரமாய்ச்சொல்லிவிட்டான் இந்த சமாச்சாரத்தை கேட்டவர்கள், அங்ஙனம் வந்திருந்த அரசனிடத்திற் சொன்னார்கள். அம்மன்னன் கோபாவேசத்துடன் ஓடி வந்து, அவனைப்பார்த்து என்ன சங்கதியென்று விசாரித்தனன். அவன் ஜீவசக்தியில்லாமல் பேசுவதற்கு பலமில்லாமல், அரசே உமதுமருமகன் கோரிகளின்மீதிருந்த ரொட்டிகளை யெல்லாந்தின்று, தண்ணீர் குடித்துவிட்டு பானையை உடைத்தெறிந்துப் போட்டான் என்று சொல்லிவிட்டான். அரசன் கோபமுடையவனாய் சரி அந்த துஷ்டன் இவ்விடத்திலேயே ஒளித்திருப்பான் பாருங்களென்று சுரங்கமுழுமையும் தேடிக்கொண் டிருக்கும்படியாய் சகலருக்கும் உத்தரவுசெய்தனன்.

அவர்களனைவரும் அன்றையதின முழுமையும் சுரங்கமுழுதுந் தேடிப்பார்த்துங் காணாமல் அரசனிடம் சொல்லுகிறார்கள். மன்னா அவன் கடற்கரை வழியாகவே போய்விட்டான் போலிருக்கிறது. யென்று சொன்னார்கள். அவையனைத்துங் கேள்வியுற்ற அரசனும்

மந்திரி பிரதானியரும் சுரங்கத்தின் வழியாகவே கடற்கரைக்குச் சென்று பார்க்கும்போது, அங்ஙனம் மனிதர்களின் காலடிதோன்றியது. சகலரும் ஆச்சரிய மடைந்தவர்களாய் இனி நாம் மோசம் போனோமென்று மனசஞ்சல முடையவர்களாய் அரண்மனைக்குப் போய்விட்டார்கள். இங்ஙனம் இவர்கள் நிலை இத்தகையதாயிருக்கையில் கப்பலிற்சென்ற விவேகானந்தனை மாலுமியானவன் பார்த்து ஆச்சரிய மடைந்தவனாய் வினவுதலாயினான்.

மாலுமி:—ஐயா! நீங்கள் தனியாகவே யாதொரு சகாயமுமில்லாமல் வந்த காரணமென்ன?

விவேகானந்தன்:—சரி! சொல்லுகின்றேன் கவனிப்பீர் யானெனது காலவித்தியாசத்தினால், அந்த ஆச்சர்யபுரியில் வந்தகப்பட்டுக் கொண்டேன், அந்த தேசத்தின் அரசபுத்திரி யென்னை மணம் புரிந்துகொண்டு சிலநாள் வாழ்ந்திருக்கையில் அவளுக்கு தேக சவுக்ய மில்லாமல் இறந்துபோனாள், அவளுடன் என்னையும் புதைப்பதற்காக, கல்லறையில் அழைத்துச்சென்று கதவை மூடி தாளிட்டிக்கொண்டு போய்விட்டார்கள். யான் தனியாகவே தயங்கி மயங்கி தத்தளித்து அந்த சுரங்கத்தில் சுற்றிக்கொண்டிருந்தேன். இனி யானென்ன செய்வதென்று யோசித்துக் கொண்டு சுரங்க சமாதியின் கோரிமீதிருந்த மூன்று ரொட்டிகளையும் சாப்பிட்டு ஜலங்குடித்து களையாறி மற்ற கோரியின் மீதிருந்த ரொட்டிகளையும் எடுத்து மூட்டை கட்டிக்கொண்டு ஓடிவந்து விட்டேன் இனி எனக்கு நல்லகாலந்தான்.

அந்த கப்பலிலிருக்கும் பிரயாணிகளனைவரும் ஆச்சரியப்பட்டு அடடா! இவ்விதமும் மனிதர்கள் கஷ்டப்படுவதெனின் ஆச்சரியந் தானேயென்று சொல்லிக்கொண்டு சிரித்தார்கள். அதைக் கவனித்த மாலுமி அவர்களையெல்லாம் கையமர்த்தி சொல்லுகின்றான்.

மாலுமி:—ஐயா! உலகிற்பிறந்த மனிதர்களில் சுகதுக்க மடைபவர் அவரவர்கள் செய்த பாபபுண்ணியத் தளவின்படியே யாகும். புண்ணியஞ் செய்தவர் யாதொரு கஷ்ட நஷ்டமுமின்றி சுகானந்தமா யிருப்பதற்காகும், பாபஞ்செய்தவர்கள் மாத்திரம் மறு ஜனனத்தில் பலவிததுயரமுந் துன்பமுமனுபவித் திருப்பார்கள். அதைக்கவனித்தவர்கள் உண்மையைக் கவனியாமல் பேசுவது ஞாயமாகுமா? அவரவர்கள் கஷ்டசுகம் அவ்வரவர்கட்குத் தெரியுமல்லாமல் மற்றவர்கட்குத் தெரியுமோ? இவ்விதமே அநேகர்

பலவித கஷ்ட நஷ்ட மடைந்திருக்கின்றார்கள். அப்படிப்பட்டவர்களெல்லாம் எவ்வளவோ சுகானந்தமாய் ஜீவித்திருக்கின்றனர். அவையனைத்தும் விவரித்துரைப்போமெனின் வேடிக்கையென்றே வயறுகுலுங்க சிரித்துசிரித்து வெறியர்களாவீர்போலிருக்கிறதே சரி: சரி!!

விவேகானந்தன்:—ஈதென்ன ஆச்சரியம்? யான்தான் கஷ்டஜீவியெனின், என்னிலுங்கஷ்டப்பட்டவர்களுமிருக்கின்றாரெனின் வியப்புறுந் தன்மையன்றோ? சரி! தாங்கள் கண்ணுற்ற கஷ்டஜீவிகளில் ஒருவருடைய சங்கதியை எனக்கு விபரமாய்ப் புகல்வீராகில் உத்தமமேயாகும்.

மாலுமி:—சரி! அப்படியே சொல்கின்றேன் கவனிப்பீர், முன்னொருகால் ஓர் வியாபாரிதனது காலவித்பாசத்தினால் ஓர் தீவிற்சென்றான். அங்ஙனம் சிலதிருடர்கள் அவனிடமிருந்த திரவியங்களையும் சாமான்களையும் அபகரித்துக்கொண்டுபோயினர். அந்தகாத்தரசனிடம்போய் முறையிட்டான். அம்மன்னவன் மனமிரங்கி அப்பப்பா! அந்தமட்டில் உனது உயிரைவிடுத்து திரவியங்களை அபகரித்துக் கொண்டுபோனது உனது தாய்வயற்றின் பாக்கிய வசமேயாகும் திருடனிடமகப்பட்ட பொருளும், யமனிடமகப்பட்ட உயிரும் திரும்பிவாராது நீ விருதாவாய் விசனிக்கவேண்டாம் விலகிப்போய் விடுமென்று துரத்திவிட்டான்.

வியாபாரிவயறெரிந்து திருடருக்குப் பயந்தேசத்தில் பிழைப்பதெவ்விதமென்று மனவிசாரமடைந்தவனாயிருந்தனன். பொழுதுபோகப்பசியும் அதிகரித்தது. என்னசெய்வான்? யாரைக்கேட்பான் அவ்வூரில் யார்துணையுமில்லை ஒருவேளை அன்னம் படைப்பவர்களுமில்லை. படைமுகம் போனாலும் அறிமுகம் வேண்டும். அவ்வாறுமில்லாமற்போனால் அவன்கதி என்னமாய் முடியும் ஒரு துணையுமில்லையென்றாலும் வயற்றுப்பசி சகிக்கமுடியவில்லை அன்றியும்,

வெண்பா.

ஒருநாளுணவை யொழியென்றா லொழியாய்
இருநாளைக் கேலென்றா லேலாய்—ஒருநாளும்
என்னோவறியா இடும்பைகூ தென்வயிறே
உன்னோடு வாழ்தலரிது.

என்னுந் தன்மையாய் வயற்றின் பசிதணிவதற்கு முடியாமல் பலவிதமாகிய மனசஞ்சலம் வாய்ந்து பிச்சையெடுத்தாயினும் பசித்

துப் பசிதணிவோமென மதித்து, அவன்மிகவும் கீர்த்திபெற்ற வியாபாரியாகையால் பகலில் யாசகமெடுக்க நாணமுற்றவனாய்ப் பகற்கால முழுதும் ஓர் சத்திரத்தில் சயனித்திருந்து, இராவுகாலமானவுடனே மெல்லெனஎழுந்து எவர்களுக்குந்தெரியாமல் தலைநிறைய முக்காடிட்டுக்கொண்டுபோய் ஒவ்வொரு வீடுகளிலும் பிக்ஷாந்தேகி மாதான்னபூரணேஸ்வரி என்று யோசித்துக் கொண்டிருப்பான். சிலர் இல்லையென்பார்கள். சிலர் யாதொன்றும் பேசாமலிருப்பார்கள். சிலர் அன்னதானம் சிரேஷ்டமானதென்று ஐயமிட்டுண்ணென்னும் வாக்கியத்தை பரிசரித்து விதிவசத்தா லிறந்தானென்னும் வியாபாரிக்கு அன்னம் படைப்பார்கள். அதையவன் வாங்கிக்கொண்டுபோய் புசித்துவிட்டு சத்திரத்திற்றானே சயனித்துக் கொண்டிருப்பான்.

இவ்விதமே சிலநாள்வரையிலும் காலங்கழித்துக் கொண்டிருந்தனன், ஓர்நாள் சில திருடர்கள் அந்த சத்திரத்தில் வந்துட்கார்ந்துக் கொண்டு என்னென்னமோ பேசிக்கொண்டிருந்தனர். இவையனைத்துங்கவனித்த வியாபாரி மனதைரியங்கொண்டு மடியில் கனமிருந்தால் வழியிற்போக பயமென்பதுபோல, நம்மிடம் முன்பு திரவியமிருந்தபடியினால் திருடர்கட்கு பயந்திருந்தோம். இப்போது நம்மிடத்தில் அரைக்காசு மில்லையே அவர்களுக்கு நாமேன் பயப்படவேண்டுமென்று, அவர்களருகில் வந்து அவர்களைப்பார்த்து ஐயா! யான் யாதொரு தொழிலுமில்லாமலிருக்கின்றேன். எனக்கு அன்னங்கொடுத்து காப்பாற்றுவீராகில் உங்களுக்கு வேண்டிய உதவி செய்வேனென்றான். அந்தத்திருடர்கள் கலகலவெனசிரித்து அட்டா ஆச்சரியமே வயிறொட்டி வீரனாகிய இவனா நமக்கு உதவிசெய்வானென்றான். மற்றொருவன் சிரித்து அவனுடைய பசிவேதனை அவ்விதமாய்ச்சொல்லச் செய்ததென்றான். இன்னொருவன் நீ எங்களுக்கு என்ன உதவி செய்வாய்? யாங்களோ திருடர்களாச்சுதே யாங்கள் எங்ஙனமேலும் திருடச்சென்றால் தேசபல முள்ளவர்கள் எங்களை பிடித்தாலும் யாங்கள் அவர்களை அடித்து உதைத்து நசுக்கிமிதித்துக் கொன்றுவிட்டு ஓடிவந்து விடுவோம், உன்னால் இவ்வளவு சாமர்த்தியஞ்செய்ய முடியுமா? வென்றான். மற்றவர்களும் பற்பலவிதமாய்ப் பரிகாசித்து இகழ்ந்தார்கள்.

வியாபாரி சற்றுநேரம் யோசித்து, இனி இவர்களிடம் பேசுவதிலும் பிரயோசன மில்லையென்று மதித்திடினும், தைரியத்தை விடா

மல் சொல்லுகிறான். ஐயா! தாங்கள் சொல்லுவது ஆச்சரியமாகவே யிருக்கிறது அஃதென்னில் ஓர் சிற்றெலியும் சிங்கத்திற்குச் சகாயம்புரிந்து உயிரைக்காத்ததே அவ்விதமிருக்க யாரும் மனிதன் நீங்களும் மனிதர் மனிதர்க்கு மனிதர் துணைபுரிவது பெரியகாரியமா? யென்றனன். அவ்வார்த்தையைக் கேள்வியுற்ற திருடர்கள் சிரித்து சதென்ன ஆச்சரியகாஷி நன்றாய்ச் சொன்னாய்! நல்லதிருக்கட்டும். எலிசிங்கத்திற்கு பல்லுக்கடங்காத பக்ஷணமாச்சுதே அவ்விதமாகிய எலியா சிங்கத்திற்கு சகாயஞ்செய்தது உண்மையாகுமா? யென்று பரிகாசமாய் பேசிக்கொண்டிருந்தனர். வியாபாரி சொல்லுகின்றான். ஐயா! ஓர் வனத்தில் சகல மிருகங்களுக்கும் எமனாக மதோன்மத்த மகா சாமார்த்தியமாயிருந்த ஓர் சிங்கமானது நடந்துபோகும்போது ஓர் சுண்டெலியானது அந்த சிங்கத்தின் கால்விரலில் அகப்பட்டுக் கொண்டு கீச்சு கீச்சென்று கத்தியது, சிங்கம் குனிந்து பார்த்தது. அந்த எலியானது ஐயோஎன்னை அநியாயமாய்க்கொல்லாதீர் என்னை உயிருடனே விடுத்தால் யான் உமக்கு ஓர்காலத்தில் சகாயஞ்செய்து உமது உயிரை காப்பாற்றுவேனென்றது, சிங்கம் சிரித்துக்கொண்டு அலக்ஷியமாய் விடுத்தது. சுண்டெலிக்கு பிராணபயங்கரகண்டம் விலகியதென்றுமகிழ்ந்து சுகமாய்ப்போனது. சிங்கம் நாள்பொறுத்து சுண்டெலி தனக்கு சொன்ன சகாயவார்த்தையை நினைந்து ஆச்சரியப் பட்டது.

இவ்விதமாயிருக்கையில் ஓர்நாள் ஓர்வேடன் தனது குலாசார வழக்கப்படியே சங்கிலிகளாக நூலாலிணைத்த கண்ணியை பூமியில் விருத்தி அங்ஙனம் ஓர் ஆட்டைக்கட்டி வைத்திருந்தனன், சிங்கம் ஆட்டைப்பார்த்தவுடனே திடீரெனபாய்ந்து பிடித்தது, ஆடுதுடித்து விழுந்தவுடனே இரும்பு ஸ்பிரிங் நூலாலிணைத்த கண்ணி கபகப வென சுருட்டிக்கொண்டது சிங்கம் அகப்பட்டுக்கொண்டது, தப்பித் துக்கொண்டு போகமுடியாமல் காலையுதறியது. பின்னலில்சிக்கி பூமி யில் விழுந்துவிட்டது. இனி சிங்கத்தின்கதி பயங்கரமாய் விட்டது. அச்சமயத்தில் முன்னம் சிங்கத்திற்கு உயிர்பிக்ஷை தருவதாய் வாக் களித்த சுண்டெலி அவ்விடத்தில் வந்து, சிங்கத்தின் பிராணபயங்கர அபாயத்தைப்பார்த்து மனஞ்சகியாமல் பரிதாபமடைந்து, தனது கூட்டமாகிய எலிகளையெல்லாந் துணையாயழைத்துச்சென்று, அந்த கண்ணியின் நூலையெல்லாம் கடித்ததறிப் போட்டதுகள் இரும்பு வளையங்களும், ஸ்பிரிங்குகளும் தனித்தனியே பிரிந்துபோனது சிங்

கம் திடீரென்றெழுந்துக்கொண்டு கைகாலையுதறி மெல்லென எழுந்து நாற்புறமும் பார்த்தது வேடன் சிங்கத்தைப் பிடிப்பதற்கு தன்னுடைய சேனைகளையும் அழைத்துக்கொண்டு ஆயுதங்களையும் எடுத்துக்கொண்டு ஓடிவர்தான் சிங்கம் ஒரே பாய்ச்சலாய் எகிறிவிழுந்து அந்த வேடனையும் அவனுக்குத் துணையாய் வந்தவர்களையும் சேர்த்துக்கொன்றுபோட்டு அந்த எலிகளுக்கு நல்லவிருந்துசெய்தது, எலிகள் மனமகிழ்புசித்து சிங்கத்தின் சேனைகளாயிருந்தன.

இவ்விதமிருக்கின்றதே உலகியல்பு அப்படியிருக்க, என்னாலும் உங்களுக்கு ஓர்காலத்தில் உங்களால் ஓர்பேருதவி உண்டாகுமென்று சொன்னான். அந்த சொல்லைக் கேள்வியுற்ற திருடர்கள் யோசித்து, சரி! இவனையும் நமது கூட்டத்திற் சேர்த்துக் கொள்ளுவோமென்று சம்மதித்தார்கள். வியாபாரிக்கு சமயல்வேலை கொடுத்தார்கள். அந்த வியாபாரியும் சுயம்பாகி வேலையில் கைதேர்ந்தவனாகையால் வெகு பக்குவமாய் அன்னபதார்த்தம் சமைத்து திருடர் வந்தவேளைக்கு அறுசுவை பதார்த்த திவ்யான்ன சுகபோஜனாதிகள் மதுமாம்ஸ பக்ஷணாதிகளுடனே வட்டிப்பான் அவர்கள் புசித்துக்களையாறிபிறகு மனமகிழ்ந்து அந்த வியாபாரியின் நன்நடத்தைக்கு மெச்சி அவனுக்கு ஓர் மாளிகை வாங்கிக்கொடுத்து, அவர்கள் திருடிக்கொண்டு வருகிற திரவியங்களையும் அந்த வியாபாரியினிடம் கொடுத்துவைத்து அவன் அப்போதைக்கப்போது சமைத்து வைத்திருக்கும் அன்னபதார்த்தங்களைப் புசித்துவிட்டு போவார்கள் இவ்விதமே சிலகால மிருந்தார்கள்.

ஓர்நாள் வியாபாரி அவர்கள் வெளியிற் சென்றவுடனே அகப்பட்டவரையிலும் வாரிமூட்டை கட்டிக்கொண்டு கடற்கரையில் வந்து அங்கனமிருந்த பிரயாண கப்பலிலேறி தன் தேசத்திற்குச்செல்லும் கட்டணங் கொடுத்து விட்டான். கப்பலை மாலுமி நடத்திவிட்டான். பிரயாணிகள் அவரவர் தேசத்திற்குப்போனவுடனே இறங்கினார்கள் திருடரிடத்திலே திருடிய வியாபாரியும் தன் தேசத்திற்போய் சுகஜீவியாய் வாழ்ந்திருந்தனன்.

இவ்விதமிருக்கின்றதே உலகியல்பு கஷ்டப்பட்டவன் சுகத்தை யனுபவிப்பதற்கென்ன தடையென்று மாலுமி சொன்ன வார்த்தையைக்கேட்ட பிரயாணிகளனைவரும் வெகு வேடிக்கையான பிரசங்கமாயிருக்கிறதென்று வயிறுகுலுங்க சிரித்துக்கொண்டிருந்தனர். அச்சமயம் அவர்களி லொருவனாயிருந்த தனபாலன் சொல்லுகின்றான்.

ஐயா! யான் ஆதியில் மிகவும் ஏழையாயிருந்தேன் எனது தாயார் மிகவும் உத்தமி பதிவிரதாதர்மத்திற் சிறந்தவள், எனது தந்தையோ யாதொருகாசும் சேகரிப்பதில்லை. என் தாய் கஷ்டப்பட்டு காசுசேகரித்துக் கொண்டுவந்து அன்னபதார்த்தம் சமைத்து எங்களுக்குப் போட்டு தானும் புசித்துக் காலங்கழித்துக் கொண்டிருப்பதுந் தவிர என்னையும் வித்தியாசாலையில் விடுத்து, கல்விகற்பிக்கச்செய்து, ஓர் வியாபாரியின்முன் கொண்டுபோய்விடுத்தனள். அவன் எனது சாந்த குணத்தைக் கவனித்து எனக்கு மாதம் ஒரு வராகன் சம்பளமும் இரண்டுவேளை அன்னமுங் கொடுத்து காப்பாற்றி வியாபார விஷயமும், கணக்குவழக்கு பார்க்கும் விபரமும் விமரிசையாய்க் கற்பித்துக்கொடுத்தனன். யான் நாளுக்குநாள் வியாபாரஞ்செய்யும் விஷயத்தில் தேர்ச்சியடைந்தவனாய் கப்பல்வியாபாரமும் வெகுசமர்த்தாய் செய்துக்கொண் டிருந்தேன், எனக்கு பதினாறு வயதானவுடனே அந்த வர்த்தகன் புத்திரியும் பருவதிசை யடைந்தனள். அவள் அழகானந்த முகவசீகரம் எனது மனதை மயக்கிவிட்டது. யான் சிலசமயம் வியாபாரத்திற்கும் போகாமல் வீட்டிலிருந்து கொண்டே அந்தப்பெண்ணின் அழகையே பார்த்துக் கொண்டிருப்பேன். எனது நினைவைகவனித்த வியாபாரி எனக்கு அந்தப்பெண்ணின் மீதிருக்கும் ஆசையைக்கவனித்து, என்னை வீட்டிலிருக்கவொட்டாமல் கடையில் உட்கார்ந்து சாமான் விற்கிரயஞ்செய்துக் கொண்டிருக்கும்படி சொல்வான், என்னசெய்வேன் எஜமான்சொல்லை தட்டக்கூடாது. பெண்ணின் ஆசையை மறப்பதற்கு முடியவில்லை கடையிலிருந்து வியாபாரஞ் செய்தாலும், நினைவு பெண்மீது தானிருக்கும், என்றாலும் அந்தப்பெண்ணுக்கும் என்மீதிருந்த ஆசையினால், சிலநேரம் யான் காணாமலிருந்தால், என்முன் அடிக்கடி வந்து, அன்பாய்ப் பேசிக் கொண்டிருப்பாள்.

இவையனைத்தும் கவனித்த வியாபாரி ஆச்சரியமடைந்து இனி தாமதித்தால் யாங்களிருவரும் மனமிசைந்து எங்கனமேனும் ஓடிப் போய் விடுவாரென யூகித்து, தனது மனைவியினிடம் புகன்றனன். அவளும்சரி அவ்விதமானால் இவ்விருவருக்கும் மணஞ்செய்து நம்மிருவர் கண்குளிரப் பார்ப்போமென்றனள். வியாபாரி புரோகிதனை வரவழைத்து ஓர் சுபதினமேற்படுத்தி கலியாணச் சடங்கனைத்தும் வழுவின்றி நடத்தி சகல பந்து ஜனங்களின் முன்னிலையில் தனது புத்திரியை எனக்கு கன்னியாதானஞ்செய்து கொடுத்தனன் அப்பால்

திருவரும் வரையிலும் எனது பத்தினியுடன் மகோல்லாச சுகானந்தமாய் வாழ்ந்துக் கொண்டிருந்தேன். இவ்விதமா யிருக்கையில் எனது பத்தினி கர்ப்பவதியாகி ஓர் ஆண்குழந்தையைப் பெற்றாள். அந்தக்குழந்தையும் மிக அழகாயிருந்தது. யான் அந்த சமயத்தில் ஓர் விபசாரியின் நேசனாகி அவளால் பலவூர்திரிந்து பலவித கஷ்டமடைந்து இப்போதுதான் எனக்கு நற்காலம் வந்து சுகப்படுஞ் சமயமாய் எமது தேசத்திற்குப் போகிறேனென்று சொன்னான்.

இவ்விதமா யிருக்கையில் கப்பலி லமர்ந்திருப்பவர்களில் ஓர் வைசியனாகிய குணசேகரன் சொல்லுகிறான். ஐயா! எங்களைப் போன்ற வியாபாரிகட்கு ஒவ்வொரு காலத்தில் நேரிடும் கஷ்ட நஷ்டங்களும், ஒவ்வொரு காலத்தில் நேரிடும் திரவியலாப சுகானந்தங்களும் சொல்வதற் காகுமோ? ஆகையால் உலகிற் பிறந்தவர்கள் தமது சுயதேசத்திலேயே யாதேனும் கைத்தொழிற்புரிந்து அன்ன வஸ்திரத்திற்குத் தகுந்த வரையிலும் திரவிய சேகரஞ் செய்துக் கொண்டிருந்தால் கஷ்டசுக மில்லாம லிருப்பதற்காகும், அன்றியும் உத்தியோகம் செய்தாலும், சரி! சுயதேசத்தில் வியாபாரஞ்செய்துக் கொண்டிருந்தாலும் சரி! கஷ்டசுக மில்லாமல் சமமாயிருப்பார்கள். இவ்விதமே உலகியல் பிருக்கின்றது. இதைப்பற்றி ஆலோசிப்பதினாற் பிரயோசன மென்னவென்று சொன்னான்.

அவ்வார்த்தையைக் கேள்வியுற்றோ ரனைவரும் சரிதானென்று ஒருவாறு மனமகிழ்ந்திருந்தனர். மாலுமி கப்பலை நடத்திக்கொண்டு போனான் வழியிலெதிருற்ற ஓர் தேசத்தைக்கண்டார்கள். அங்ஙனம் இறங்கவேண்டியவர்க ளனைவரும் மிறங்கவேண்டியதற்காக மாலுமி கப்பலைகடற்கரையில் கொண்டுவந்து நிறுத்தினான். அச்சமயம் அந்த தேசத்தி லிறங்குபவர்களெல்லாம் இறங்கிவிட்டார்கள். அவர்களுடனே விவேகானந்தனும் இறங்கிவிட்டான் மற்றவர்களுடனே மாலுமி கப்பலை நடத்திக்கொண்டு போயினான். விவேகானந்தன் அத்தேச வாசிகளுடனிறங்கி அவர்களுடனேவழிகடந்து கொண்டுபோகையில், ஓர் கிளைவழி காணப்பட்டது அம்மார்க்கமாய்ச்சென்று வழியிலெதிருற்ற ஓர் நந்தவனத்திற்சென்று அங்கணமிருக்கும் தாமரைப்பொய்கையிலிறங்கி ஸ்நானபான நேமநிஷ்டைமுடித்துக்கொண்டு இனிமைசேர்கனிவர்க்கங்களைப் பறித்துப்புசித்து நன்னீருந்திக் களைதெளிந்து சற்றுநேரம் வசந்தமண்டபத்திற் சயனித்திருந்து நித்திரைதெளிந்து விழித்தெழுந்து குணரத்னத்தை நினைந்து விசனசாகரத்தி லாழ்ந்த

வனாய் சற்றுநேரம் வரையினும் யோசித்து இனிநாம் இங்ஙனமிருப்பதினாற் பிரயோசனமில்லை. நாம் இனி கானகமார்க்கமாகவே தேடிக்கொண்டு போவோமென்று பிரயாண மாயினன்.

இவ்விதமாய் விவேகானந்தன் இரவுபகலாய் சிலநாள் நடந்த பின்னர் குணரத்னமிருக்கும் தேசத்தின் பாதையகப்பட்டது, அம்மார்க்கமாகவே போய்க்கொண்டிருக்கையில், அநேகவீடுகளும், மாடமாளிகைகளும் காணப்பட்டது ஆனால், யாதொரு ஜனங்களுமில்லை காய்கனி பதார்த்தங்களும், பறவையினங்களும் வாசமாயிருந்தது, என்றாலும், ஒருவரும் வாசமில்லாத தேசமாயிருந்தது, விவேகானந்தன் ஆச்சரியமடைந்து ஈதென்ன நூதன புதுமையாயிருக்கிறது. எந்த தேசத்திலும் பகற்காலத்தில் மனிதசஞ்சாரமும், இராக்காலத்தில் மனிதர்கள் சப்தமின்றி சயனிப்பதுமாயிருப்பார்கள். இந்த தேசத்தில் பகற்காலத்திலும் சந்தடியில்லாமலிருக்குங் காரணமென்னவென்று ஓர் வீட்டிற்சென்றான். அங்ஙனம் பதுமைகளைப் போல் மனிதர்களெல்லாம் கல்லாய் சமைந்திருந்ததினால் விவேகானந்தன் வியப்புற்று, அடடா! ஈதென்ன ஆச்சரியகாக்ஷி? இந்நகரமிவ்விதமாய்ப் பாழடைந்த காரணமென்னவென்று யோசித்தவனாய் அந்நகரமுழுதுமுள்ள ஒவ்வொரு வீடுகளிலும் சென்று பார்க்கலாயினன். அந்தந்த வீடுகளிலும் அரிசி பருப்பு காய்கறி வகைகளும், மசாலைகளும் விசேஷமாயிருந்ததினால் அவைகளைப் பிரியமுடனெடுத்து சமையல்செய்து வயற்றுப்பசி தணியும்படி புசித்து மனமகிழ்ந்தனன், அந்த வீட்டிலிருக்கும் கட்டிலின்மீது சயனித்து நித்திரை செய்தெழுந்திருப்பதும், பசியெடுக்கும்போது சமையல் செய்து புசித்துக் களைதெளிவதுமாய் அந்த தேசத்திலேயே பதினைந்து நாளிருந்தனன்.

இவ்விதமாயிருக்கையில் ஒருநாள் நகர்புறத்திற்கு வெளியே வருகையில் அங்ஙனம் அநேகர் யுத்தம் புரிந்து சண்டை செய்வதுபோலும், தலையற்றவர்களும் கையற்றவர்களுமாய் சகலரும் கல்லாய் சமைந்திருந்ததைக்கண்டு இந்நகரில் ஏதோ கலகம் நேரிட்டதுபோற் காண்கிறது அதனாலல்ல யாவரோ மனம் நொந்து சபித்தார்களென மதித்து, அங்ஙனம் சற்றுநேரம் பார்த்துக் கொண்டிருந்து மறுபடியும் திரும்பி தென்புறமாய்ப் போய்க்கொண்டிருந்தனன். அங்ஙனம் ஓர் ஆறு காணப்பட்டது, அந்த ஆற்றின் கரையோரமாய்ப் போய்க்கொண்டிருந்தனர்: மூன்று பெண்கள் தண்ணீர்க் குடமெடுத்துக்

கொண்டு வந்தனர். விவேகானந்தன் திடுக்கிட்டு, இவர்கள் யார் தேவ கன்னியரோ? வனதேவதைதயோ யாதுந்தெரிகிலேனே ஐயோ நாம் இவர்கள் முன்சென்றால் கல்லாய் மரமாய்ச் சபித்துவிட்டா லென்ன செய்வதென மனமிரண்டு திகைத்து நின்றான். அவர்களுடனே வந்திருந்த குணரத்னம், ஆச்சரியமடைந்து ஈதென்ன நூதன புதுமை இத்தனைநாளாய் நம்மைத்தவிர வேறொருவரும் இங்ஙனம் வந்திலர். இந்தமனிதன் யாரோதெரியவில்லையே இனி இதற்கென்ன யோசனை யென்று, அருகிலிருந்த அவ்விரண்டு பெண்களையும் விசாரித்தனள்.

விரதபூஷணி:—அக்கா! யாமென்ன செய்வோம்? நமக்கு யாதொரு வரும் துணையில்லை தனியாயிருக்கிறோம் அவனோ ஆண்பிள்ளை!

குணபூஷணி:—(புன்னகைபுரிந்து) அம்மா நீங்களிவ்விதமாய் விசனிக்கின்றீரே அவரவர்கள் செய்த வினைப்படியே முடியுமன்றி, தடுப்பதற்காகுமோ நாம் மூவரும் தனித்தனியே யோசிப்பதால் பிரயோசனமில்லை, இந்த ஆற்றில் வீழ்ந்திறப்போமாகில் "குளிருஞ் ஜுரமும் உடலோ டொழிந்ததென நமது கஷ்டத்தைக்" காற்றில் போட்டு விட்டோமென்று பிராணனைவிட்டு விடுவோம், இதுதான் சரியான யோசனை!

குணரத்னம்:—அம்மா! நீங்கள் அவ்விதமாய் யோசியாதீர். யான் உங்களிருவரையும் எனது நேத்திரங்களைப்போற் காப்பாற்றுவேன்? உங்களுக்கு அபாயம் வரும்போது யான் சும்மாய் வேடிக்கைப் பார்த்துக்கொண்டிருப்பேனோ? அஞ்சாதீர் வீணிற் சாகாதீர் தற்கொலை செய்துக்கொள்வது மஹா பாதகமாகும். வேண்டாம் வீணில் அற்பமதியை சித்தத்தி லெண்ணாதீர்.

குணபூஷணி:—ஈதென்ன ஆச்சரியம், பெண்ணென்றால் பேயுமிரட்டும், அவ்விதமாகிய நீ எங்களுக்கு அபாயம் வரும்போது ஆதரிப்பேனென்பது, ஆச்சரிய மல்லவோ? அவனோ ஆண்பிள்ளை! அவனுக்குச் சமானமாயிருந்தால் தானே பயமில்லாம லிருப்பதற்காகும், எங்களைப்போன்ற ஸ்திரீயாகிய நீ எங்களுக்கு கஷ்டம்வராமல் காப்பாற்றுவேனென சொல்வது ஆச்சரியம்! அன்றியும் பேதமையென்பது மாதர்க்கணிகல மென்னுந் தன்மையாய், எண்ணறக்கற்று எழுத்தறவாசித்தும், பெண்புத்தியாலே பிழைமோச மாச்சதேயெனும், கமலவல்லியின் கதையைப்போலானாலென்ன செய்வது?

என, குணபூஷணி வினவியதைக் கேள்வியுற்ற விரதபூஷணி சிரித்து, அக்கா ஆனது ஆகட்டும் அந்தமனிதனும் நம்மை கவனியாமல் போய்விட்டான் யாவும்பிறகு யோசிப்போம், நீ சொல்லிய கமலவல்லியின் கதையைச்சற்று விபரமாய்ச்சொல்வாயென்று கேட்டாள். இம்மூவரும் விவேகானந்தனைக்கண்டு மனமிரண்டிருக்கையில், அவனும் இவர்களைப்பார்த்து, இவர்களென்ன வனதேவதையோ? தெய்வகன்னியரோ? யென, மிரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேயென்றெண்ணைப் படுவதுபோலதிகைத்து திப்ரமையடைந்து, திடீரென ஓடிவிட்டான்.

இங்ஙனம் இவ்விதமா யிருக்கையில், குணபூஷணி சொல்லுகிறாள். அம்மா! நீங்கள் விருப்பமாய்க்கேட்கும் சரிதையைச் சுருக்கமாய்ச் சொல்வேன்! கேட்பீரென்று கமலவல்லியின் சரிதையைச் சொல்வதற்கு ஆரம்பித்தனள். ஓர்சிற்றூரில் அழகிலும், தனதான்ய சம்பத்திலும் மேன்மைபெற்ற கமலவல்லியெனும் ஓர் தாசியானவள் தான் அநேக தனவந்தர்களையும், இராஜ புத்திரர்களையும் மயக்கி அவர்களிட மிருந்த பொருள்களை யெல்லாம் அபகரித்துக்கொண்டு வெகு சாமர்த்தியமா யிருந்தனள். ஆனால் அழகிற் சிறந்தவளான மதித்திடினும், கல்வியிலும் வெகு சாமர்த்திய முள்ளவள் சங்கீத சாஹித்ய பரதநாட்டியத்திலும் சிறந்தவள் அதனால்தான் சகலரும் அவளுக்கு வேண்டிய திரவியந் தந்துவிட்டுப் போயினர். அந்த செல்வச்செருக்கால் எவர்களையும் மதியாமல் அலக்ஷியஞ்செய்திருந்தனள். இவ்விதமா யிருக்கையில், ஓர்நாள் ஓர் மூர்க்கன் அவள் வீட்டுக்குப் போய் அவளிடத்தில் அன்பாய்ப்பேசி, பெண்ணேயான் உனதுபெருமையை எமது தேசத்தின் அரசனுக்குச் சொன்னேன் அவர் உன்மீது ஆசையுடையவராய் உன்னை அழைத்துக்கொண்டு வரச்சொன்னாரென்று மிகவுந்தந்திரமாய்ச் சொன்னான். அவள் உண்மைதானென மதித்து தனது ஆபரணாதிகளை யெல்லாம் அழகாயணிந்து கொண்டு தனது வீட்டுபத்திரங்களையும் தனக்கு அநேகர் வெகுமதியாகத்தந்த பூஸ்திதி பத்திரங்களையும் எடுத்துக்கொண்டு மிகவும் பெருமையுடன் அரசனுக்குக் காண்பித்தால் அவன் நமக்கு வெகுமதி தருவானென மதித்து யாதொருவரும் தனக்குத் துணைவேண்டிய தில்லையென மதித்து, தனது அடிமைப்பெண்களை பல்லக்கு சிங்காரித்துக்கொண்டு வரச்சொன்னாள்.

அந்த தாதிப்பெண்கள் பனிரெண்டுபேரும் அவ்விதமே நன்கெனச்சம்மதித்து மிகவும் பிரகாசமான தந்தபல்லக்கை சிங்காரித்து மலர்மாலை தோரணங்களால் அலங்காரஞ் செய்துக்கொண்டு வந்தார்கள். கமலவல்லி அந்த பல்லக்கின் மீதமர்ந்தனள். தாதிகள் எடுத்துக்கொண்டு அவளை மோசஞ் செய்வதற்காக அழைத்துக்கொண்டு போக வந்திருக்கும் நயவஞ்சகனுடனே நடந்தார்கள். அந்த வஞ்சகன் தான் கோரிய எண்ணங் கைகூடியதெனை மதித்து, அவர்களை கானகமார்க்கமாய் அழைத்துச்சென்று சகலரையும் கொன்றுவிட்டு கமலவல்லியின் ஆபரணங்களையெல்லாம் அபகரித்துக்கொண்டுபோவதற்காக மோசயெண்ணங்கொண்டு மஹா உத்தமனைப்போலவும் வழிகாட்டு பவனைப்போலவும் பல்லக்குமுன்னால் நடந்து கொண்டுபோய் காட்டு மார்க்கமாய் அழைத்துக்கொண்டு போனான். ஆனால் தாதிகளுக்கு மாத்திரம் கொஞ்சம் மனபயங்கரமாகவே யிருந்தது, கமலவல்லி கொஞ்சமும் அஞ்சாமலிருந்தனள். அந்த வஞ்சகன் மனித சஞ்சாரமில்லாத வனத்தில் அழைத்துக் கொண்டுவந்து பல்லக்கை இறக்கும்படி சொன்னான் தாதிகளுக்கு அப்போதே பிராணன்போய் விட்டதென திர்மானித்து, பல்லக்கை பூமியிலிறக்கினார்கள். கமலவல்லி சந்தேகித்து, ஓஹோ ஈதென்ன மோசமா யிருக்கிறதேயென வயறெரிந்து ஐயா! நீர் அரசனிடம் அழைத்துக்கொண்டு போகிறேனென்று ஆரண்யத்தில் கொண்டுவந்து விடுத்திரே ஈதென்ன புதுமையென்றாள். அவ்வார்த்தையைக் கேள்வியுற்றவஞ்சகன் கலகலவென சிரித்து பெண்ணே! யானுன்னை அரசன்முன் கொண்டுபோய்விடுத்து நாட்டியஞ்செய்து வைப்பதற்கு யான் நட்டுவனல்ல, யான் உன்னையும் உனது தாதிப்பெண்களையுங் கொன்று உமது ஆபரணங்களையெல்லாம் அபரித்துக் கொண்டுபோகவந்த சுத்தவீரனென்றான். அவ்வார்த்தையைக் கேட்டவுடனே தாதிப்பெண்களனைவரும் ஆ! அம்மணி இத்தனை நாளாய் எங்களைக் குழந்தையைப்போல அறுசுவை பதார்த்த திவ்யான்ன சுகபோஜனங் கொடுத்து வளர்த்து இன்றைய தினம் எங்களுடன் நீயும் பிராணனை விடுவதற்காச்சுதே யென்றழுதார்கள். கமலவல்லி சற்றுயோசித்து ஐயா! எண்ணறக்கற்று எழுத்தரவாசித்தும் பெண்புத்தியாலே பிழைமோசம் வந்ததுபோல யான் பேராசை திராக்கவலையென்னும் வாக்கியத்தை யனுசரியாமல் வந்துவிட்டேன். ஆனாலும் நீ எங்களைக் கொல்லுவதினால் பிரயோசனமென்ன? யாங்கள் உமது பகைஞரல்லவே யென்றாள். அந்த வஞ்சகன் கையைத்தட்டி கலகலவென சிரித்து பெண்ணே யான் உங்களைக்

கொல்லாமற்போனால் உமது ஆபரணம் என்கைக்கு வருமா? நீங்கள் எனக்குப் பகைஞருமல்ல உங்களைக் கொல்வதினால் யாதொரு பிரயோசனமுமில்லை என்றாலும், ஆபரணமே ஆட்கொல்லி யென்பதுபோல உமது ஆபரணங்களே உமக்கு எமதூதனாயமைந்து என்றால் உங்களைக் கொல்லும்படி செய்கிறதென்றான்.

அவ்வார்த்தையைக் கேள்வியுற்ற கமலவல்லி சொல்லுகின்றாள்: ஐயா! உமக்கு ஆபரணங்கள்தானே தேவை? அதனைக் கொடுத்துவிட்டால் எங்களைக் கொல்ல மாட்டீரல்லவா? யென்றாள் வஞ்சகன் சம்மதித்தாசரி! இச்சமயமே உன்னுடைய ஆபரணங்களும் இந்தப்பெண்களுடைய ஆபரணமும் கழட்டிக்கொடுத்தால் யான் எடுத்துக்கொண்டு போகிறேனென்றான். தாதிகள்விட்டுது சனியின் கொடுமையென்று அம்மணி இச்சமயமே இந்த ஆபரணங்களை யெல்லாம் கழட்டிக் கொடுத்து விடுவோமாகில் நமது பிராணன் நிலைக்கும், நாம் சிறிது காலம் காய்கனிகளைப் பறித்துப் புசித்துக்கொண்டே மனிதசஞ்சாரமுள்ள தேசத்திற்சென்று முன்னிலும் விசேஷமான ஆபரணங்கள் செய்து அணிந்துகொண்டு நமதுசுயதேசத்திற்குப் போவோமென்று சொல்லிக்கொண் டிருந்தனர்.

இங்ஙனம் இவர்கள் நிலை இத்தன்மையதா யிருக்கையில் அந்நகரத் தரசகுமாரன் சில சேனைவீரரைத் துணையா யழைத்துக் கொண்டு மிருகவேட்டை யாடுதற்கு வந்தவன், இங்ஙனம் அழுகுரலோசை கேட்டதை உற்றுகவனித்துச் சேனைவீரருடனே வந்து அவர்களை மடக்கிக்கொண்டான். அச்சமயம் தாதிகளும் கமலவல்லியும் மனமகிழ்ந்து ஐயா! உயிர்போகுந்தருணத்தில் பிராணபிக்ஷைகொடுத்துக் காப்பாற்ற வந்த உத்தமர்களே இத்திருடன் எங்களை வஞ்சகமாய் அழைத்து வந்து எம்மைக்கொன்று ஆபரணங்களை அபகரித்துக்கொண்டு போவதற்காக வந்தானென்று தமது சவிஸ்தாரமும் நடந்த சமாச்சாரங்களும் விபரமாய்ப் புகன்றார்கள். அந்த இராஜகுமாரன் அந்த வஞ்சகனை சிறைச்சாலையிலடைத்து, கமலவல்லியையுந்தாதிகளையும் மாளிகையிலிருக்கும்படி அவர்களுக்கு வேண்டிய திரவியந்தந்து அவர்கள் சுயதேசத்திற்கு அனுப்பிவிட்டான். அவர்கள் சுகஜீவியாயிருந்தனர். இவ்விதமிருக்கின்றதே உலகியல்பு ஆகையால் கமலவல்லியாகிலும் மனித சஞ்சாரமுள்ள வனத்திலிருந்தாள். அத்தேசத்தின் அரசகுமாரன் வேட்டைக்கு வந்ததால் அந்த வஞ்சனை சிறைச்சாலையி லிட்டு, கமலவல்லியையும் தாதிகளையும் காப்பாற்றினான், நமக்குஎந்த

ஆண்பிள்ளை துணையாயிருக்கின்றான் நாமோ மூவரும் ஸ்திரீகளாயிருக்கின்றோம், தேசமோ பாழடைந்ததேசம், இவ்வித மிருக்கின்றதே நமது காலபலன் நாம் எவ்விதமாய் அந்த ஆண்பிள்ளைக்குப் பயப்படாமல் தைரியமா யிருப்பதென்று சொன்னாள், குணரத்னம் சொல்லுகிறாள் அம்மா எனக்கு ரூபமாறும் வித்தைதெரியும் அதனாலேயான் உம்மைக் காப்பாற்றுவேனென்று திடீரென புருஷரூபமாய், கையில் அம்புவில்லுமெடுத்துக்கொண்டு நின்றாள். வீரராயிருந்தாலும் மனமிரண்டு ஓடிப்போவார்களென்றால் எனது சமர்த்தையார் சொல்வதற்கியலுமோவென்று தனக்கு சந்நியாசி உபதேசித்த புருஷரூபமாறும் வித்தையை உச்சரித்தனள். திடீரென ஸ்திரீரூபமாறி புருஷரூபமாயினள். அதைக்கண்ணுற்ற குணபூஷணியும் விரதபூஷணியும் திடுக்கிட்டு, ஆ! ஹா!! ஈதென்ன மாயஜாலவித்தையாயிருக்கின்றதே இன்னுஞ்சற்று நேரத்திற்குமுன் நம்மைப்போன்ற ஸ்திரீயாயிருந்தவள் தற்சமயம் வீராதிவீர வீரப்ரதாப இராஜபுத்திரனைப்போல வில்லுந் தனுசேந்தி நம்மெதிரினில் நிற்கின்றாளே ஈதென்ன பயங்கரமாயிருக்கின்றதேயென ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டு ஆலோசிப்பதாயினர்.

விரதபூஷணி:—தாயற்றபோதே சஞ்சல முற்றதெனுந் தன்மையாய் சிறியதாயாரின் கொடுமையைச் சகிக்கமுடியாமல் கஷ்டப்பட்டுக் கானகத்தில்வந்து பரதேசியாயலைந்து, இந்த தேசத்தில் வந்து பயங்கரஜீவனஞ் செய்துக்கொண்டிருக்கின்றோம், இந்த சமயத்தில் ஈதென்ன பூதமோ இராக்ஷசமாய்கையோ தெரியவில்லையே.

குணபூஷணி:—(புன்னகைபுரிந்து)சரி தைரியத்தைவிடாதே இன்னுஞ் சற்றுநேரம் வரையினும் பொறுத்திருந்தால் நடக்கிற விஷயத்தைப் பார்த்துக் கொள்வோம்.

விரதபூஷணி:—பார்த்துக்கொள்வதென்ன பக்ஷணமானபிறகு பார்ப்பதெவ்விதம்?

குணரத்னம்:—(சிரித்து) அம்மா நீங்கள் சொல்வதெவ்வித மிருக்கிறதெனின் அதிர்ஷ்டத்தால் கற்பகத்தருவைக்கண்டும் சந்தேகத்தால் ஜீவனிழந்த கதையைப்போல பேசுகிறீரே! யானும் உங்களைப்போல ஸ்திரீயேயாகும். எனது காலவித்யாசத்தினால் இனத்தைப்பிரிந்த மானைப்போல மனவிசாரமாயிருக்கையில் ஓர் மஹான் என்மீது பரிதாபமடைந்து எனக்கு ரூபமாறும்

வித்தைதனைக் கற்பித்தார் அதனுலே யான் சமயத்திற் கேற்ற விதமாய்த் தப்பித்துக்கொண்டு வருகிறேன் நீங்கள் பூதமெனவும், இராக்ஷசமாய்கை யெனவும் சொல்வதினுல் பிரயோசன மென்ன?

குணபூஷணி:—ஆம்! யானும் சிலசமயங்களில் கேள்வியுற்றிருக்கின்றேன் ரூபமாறும்வித்தைதனை அநேகர் கற்றிருக்கின்றனர். அவ்விதமே நமது குணரத்தினமும் கற்றிருக்கின்றுற் போலிருக்கிறது இராக்ஷசமாய்கை யானுலும், பூதமாய்கையானுலும் இன்னும் நம்மை பக்ஷணம் செய்யாமலிருக்கக்கூடுமோ? அப்படியல்ல நம்மைப்போன்ற ஸ்திரீயேயாகும்.

விரதபூஷணி:—சரி! அவ்விதமாயினும், அம்மா! தாங்கள் சொன்னீரே அந்த கதானுசாரத்தைக் கொஞ்சம் விபரமாய்ப்பகல்வீர்.

குணரத்னம்:—அம்மா! அப்படியே சொல்கின்றேன் கவனிப்பீர். ஓர் பிராமணன் யாத்திரைவாசியாய் போகுஞ்சமயத்தில் வழியிலெதிருற்ற கானகத்திற் போயிருந்தனன் மிகவும் கொடிப்பான வெய்யல் பிரகாசித்துக் கொண்டிருந்தது, பிராமணன் வெய்யல் தீக்ஷண்யத்தைச் சகிக்கமுடியாமல் அருகிலிருந்த ஓர் சோலையிற்சென்றுன். அங்ஙனமிருந்த கற்பகத்தருவெனும் விருக்ஷத்தைக்கண்டான். அது கற்பகவிருக்ஷமென்றுங் கவனித்தவனல்ல ஆனுல் அந்த விருக்ஷத்தினருகில், குளிர்ந்தவாடை வீசிக்கொண்டிருந்தது. அதனைக் கண்டவுடனே ஆனந்தங்கொண்டு, அடடா என்ன அன்பான ஸ்தானமாயிருக்கிறது, சரி இவ்விடத்தில் ஓர் மலரணை மஞ்சமிருந்தால் சயனித்து நித்திரை செய்யலாமென்று நினைத்தான், அவ்விதமே ஓர் மலரணைமஞ்சம் எதிரிலிருக்கக் கண்டான். அப்போது ஆச்சரியமடைந்து ஓர்பெண் இங்ஙனமிருந்தால் ஆனந்தமாய் விளையாடிக்கொண்டிருக்கலாமென்று நினைந்தான். அவ்விதமே ஓர் அழகியகன்னி தெய்வ ரம்பையைப்போல அழகான முகவர்ச்சரத்துடனே ஆடை ஆபரண அலங்கார சிங்காரமுடன் கையில் தங்கத்தாம்பாளத்தில் பலகாரபக்ஷணங்க ளெடுத்துக்கொண்டு வந்து மஞ்சத்தின்மீது வந்துட்கார்ந்தனள். அதைக்கண்ட பிராமணன் இது பூதமோ வென்று நினைந்தான் அப்போதே அந்தப்பெண்ணும் மஞ்சமும் திடீரென மறைந்து ஓர் பெரிய பூதமாய்க் காணப்பட்டது. அந்தப்பிராமணன் மனமிரண்டு அடடா இது நம்மைப் பக்ஷித்து

விடுமோவென்று நினைந்தான். உடனே அந்த பூதம் அவனை எடுத்து விழுங்கிவிட்டது அவ்விதமிருக்கின்றதே உலகியல்பு, ஆகையால் மிரண்டவர் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய் என்னுந் தன்மையாகுமல்லவோ? இதனை கவனியாமல் என்னைப்பார்த்து நீங்கள் மனமிரளுவதேன்?

என, பரிகாசமாய்ச் சொன்னான். இவன் சொல்லைக் கேள்வியுற்ற அவ்விரண்டு பெண்களும் சரியென சம்மதித்துக் கொண்டிருந்தனர். அச்சமயம் விவேகானந்தன் மறுபடியும் அம்மார்க்கமாய் வருகையில் ஆண்பிள்ளை வேஷமாயிருக்கும் குணரத்னத்தைக் கண்டான். இதோ ஓர் ஆண்பிள்ளை வருகிறான் இவனிடம் நமது மனக்கருத்தைச் சொல்லி உண்மையை விசாரிப்போமென்று அருகில் வந்தான். அச்சமயம் குணரத்னம் அவன் முகத்தைப்பார்த்து, அடடா! இவர் நமது மணாளனைப்போற் காண்கிறதென மதித்து விசாரிப்பதாயினள்.

குணரத்னம்:—தாங்கள் யார்? எத்தேசத்தினர் இங்ஙனம் வந்த காரணமென்ன?

விவேகானந்தன்:—யான் ஓர் காரணத்தைப்பற்றி வருகிறேன். எனது மனையாள் குணரத்னம் என்னைவிடுத்து பிரிந்து போயினள். அவளைத்தேடிக்கொண்டு போகிறேன், என்பெயர் விவேகானந்தன் தாங்கள் யார்?

குணரத்னம்:—பிராணபதி யான்தான் தமது மனையாளாகிய குணரத்னம், ஓர் மஹான் எனக்கு அநுக்கிரகஞ் செய்த ரூபமாறும் வித்தையினால் சமயோசிதம்போல யான் வேஷமாறிக் கொண்டிருக்கின்றேன். இச்சமயம் இந்த இரண்டு பெண்களும் பலவித துன்பமடைந்து இந்நகரில் வந்திருக்கின்றார்கள்.

விவேகானந்தன்:—ஈதென்ன ஆச்சரியம்? நாமிவ்விதமாய் துயருற்றோமென்றால், இவர்களுக்கு என்ன விஷயமாய் இத்தகைய துன்பமுற்றனர்?

குணரத்னம்:—பிராணபதி இவர்கள் யாரெனின் அவந்திபுரி ராசன் குமாரத்திகள் இந்தப் பெண்களின் தாய் சிறுவயதில் இறந்துபோனபடியால், அரசன் மற்றோர் பெண்ணை மணம் புரிந்துகொண்டு, இவர்கட்கு சிற்றன்னையாய் நியமித்தனன். அக்கொடிய துன்மார்க்கி இவர்களைப் பலவிதமாகிய துன்பஞ்செய்துக் கொண்டிருந்தனள். அதையும் இவர்கள் சகித்துக் கொண்டிருந்தனர். அவ்விதமிருந்தும், சில தாதிப்பெண்களால் மயக்க மருந்தாற்செய்த பலகாரத்தை இவர்களுக்குக்கொடுத்து மயங்கி மூர்ச்சித்து விழுந்தபிறகு காட்டில் போட்டுவிட்டு வரும்படி உத்திரவு செய்தனள். அந்த துன்மார்க்கிகள் அவ்விதமே நன்

கெனச் சம்மதித்து, இவ்விரண்டு பெண்களை மஞ்சத்துடனே எடுத்துக் கொண்டுபோய் கானாற்றில் போடாமல் ஓர் வனத்தில் விடுத்துப்போய் விட்டார்கள். இந்தப்பெண்கள் கானகமார்க்க மாயலைந்து திரிந்து இந்நகரில் வந்து சேர்ந்தனர்.

விவேகானந்தன்:—ஆ! அப்படியா? பெண்ணே யானும், இவ்விஷயத்தை யறிவேன். அஃதெவ்விதமெனில், யான் உன்னைத்தேடிக் கொண்டு கானக மார்க்கமாய் வருகையில் வழியிலெதிருற்ற அவந்திபுரியில் வந்தேன். அத்தேசமன்னன் தன்குறையனைத் தும் புகன்றனன், யானும் எனது மனக்குறை யனைத்தும் சொன்னேன். அருகிலிருந்த மந்திரி இருவருக்கும் பலவித தைரியஞ்சொல்லி எனக்கு மனதைரிய முண்டாக்கினர்.

குணரத்னம்:—சரி! அவ்விதமானால் யாம் இந்தப்பெண்களை யழைத் துக்கொண்டு அவந்திபுரியிற்சென்று, அங்ஙனம் சிலநாளிருந்து பிறகு நமது தேசத்திற்குப் போய்விடுவோம்.

விவேகானந்தன்:—நீ சொல்வதும் சரிதான் ஆனால் இந்ததேசத்தில் வந்து நாம் பசியில்லாமல் பக்ஷணம் புசித்துக் கொண்டிருந்து நமது கஷ்டத்தை விலக்கிக்கொண்டு ஜீவித்துக் கொண்டிருந் தோம், அந்த சகாயத்திற்குப் பிரதிசகாயமாக இவர்களையெல் லாம் எழுப்பிவிட்டால், அதுதான் சிறந்த தர்மம், அஃதெவ்வித மெனின்,

வெண்பா.

நன்றி யொருவருக்குச் செய்தக்கா லந்நன்றி
என்று தருங்கோ லெனவேண்டாம் நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையா லேதான் தருதலால்.

என்னுந் தன்மையான நன்மையே செய்துக் கொண்டிருப்பது தான் உத்தமரியல்பென்று சொன்னான்.

குணரத்னம்:—ஆ! ஈதென்ன ஆச்சரியம், இறந்தவரை எழுப்புதற்கு நாமென்ன பகவானோ? அன்றியும், கல்லாய்ச் சமைந்திருக்கின் றார்களே, இவர்களை எழுப்புவ தெவ்விதம்?

விவேகானந்தன்:—ஆம்! ஆம்!! யானும் அவ்விதமே யோசித்துக் கொண் டிருக்கின்றேன்.

என்று சொல்லிக்கொண் டிருக்கும்போதே ஓர் மஹான் அம் மார்க்கமாய் வந்தனர். அவரைக்கண்ணுற்ற விவேகானந்தனும், குண ரத்ினமும் பயபக்தி விஸ்வாசத்துடன் பணிந்து நமஸ்கரித்தனர்கள் அம்மஹான் அவர்களை ஆசீர் வதித்து உங்களுக்கு என்னவரம் வேண்டுமோ அவைகளை கேட்பீராகில் இப்போதே தருகிறேனென்

ரூர். விவேகானந்தன் மனமகிழ்ந்து, சுவாமி இத்தேசத்தின் மாந்தர்கள் சிலையுருவாய்ச் சமைந்திருக்கின்றார். இவர்களை உயிர்பெற எழுப்பி விடுவீராகில் உத்தமமாயிருக்குமென்றான். உடனே அம்மஹான் அந்நகரின் சிம்மாசனத்தின் முன்பக்கநின்று பார்த்தவுடனே அந்நகரத்தின் விபரமனைத்தும் கவனித்து இனி இவர்களை உயிர் பெறச் செய்யவேண்டுமெனும் நல்லெண்ணத்துடன் தனது மந்திர சக்தியால் சகலரையும் எழுப்பிவிட்டார்.

அச்சமயம் அந்நகரத்தின் அரசன் முதலாயினோரெழுந்து பார்க்கையில் ஈதென்ன நூதனபுதுமையாம் இவ்விதமாக நினைத்த இடத்தில் சயனித்திருக்கும் விந்தை யென்னவென்று யோசித்துக் கொண்டிருந்தனர். விவேகானந்தன் அந்நகரத் தரசனைப்பார்த்து ஐயா நீங்கள் யாது காரணமாக இத்தகைய கஷ்டநஷ்ட மடையலானீரென்று வினவினன். அரசனுக்கு பழைய நினைவு ஞாபகத்தில் வந்து, ஐயா நீர் யாவரோ தெரியவில்லை. ஆனால், எமது சவிஸ்தாரத்தைச் சொல்கின்றேன் கவனிப்பீர். ஓர் மாயராக்ஷதன் இந்நகரில் அநேகமனிதரை கொன்று தின்று கொண்டிருந்தனன். அதனால் இத்தேசத்தின் மனிதர்களனைவரும் ஒன்றாய்ச்சேர்ந்து அந்த அசுரனைப் பலவிதமாய்ச் சித்ரவதைசெய்து கொன்றுவிட்டார்கள். அவனுடைய சேனைகளாகிய சிலமாயராக்ஷதர்கள் ஓடிவந்து பெரும்போர் புரிந்து எனது அஸ்திரத்தினு லுயிரிழந்தார்கள். அவர்களில் ஒருவனே மாயராக்ஷதன் இவ்விதமாய்ச் செய்துவிட்டுப் போயினான். இப்போது யாங்கள் உயிர் பெற்றெழுந்த காரணம் எங்களுக்குத் தெரியவில்லை யென்றனன்.

அவ்வார்த்தையைக்கேட்ட விவேகானந்தன் சொல்லுகின்றான். அரசே யானும் எனது பத்தினியும் எமது காலவித்தி யாசத்தினால் கானக வாசிபாயலைந்து இந்நகரில் வந்தோம். இங்ஙனம் சகலருங் கல்லுருவாயிருந்தார்கள். அச்சமயம் யாங்கள் மனந்தாளாமல் விசனப்பட்டுக் கொண்டிருக்கையில், இம்மஹான் வந்து சகலரையும் உயிர்பெற் றெழுந்திருக்கச் செய்தார். என்றுரைத்தனன் அந்நகரத் தரசன் மனமகிழ்ந்து அப்பா கருமசொரூபியாகிய தபோநிதியே தாங்கள் எங்களுக்கு செய்த பேருதவிக்குப் பிரதியுபகாரம் யானென்ன செய்வேனென்று மனோல்லாசமாய்ச் சொல்லுகின்றான். தாங்கள் எமக்கு செய்த பேருதவியை யாங்கள் ஒருக்காலும் மறவாமலிருப்பதற்காக எனது குமாரத்தியை நீ கலியாணஞ் செய்துக்கொண்டு இந்நகரத்திற்றானே இருப்பீரென்று வேண்டினன்.

அவ்வார்த்தையைக் கேள்வியுற்ற விவேகானந்தன் மனமகிழ்ந்து அரசே! தமது இஷ்டத்தின்படியே யானும் சம்மதிக்கின்றேன், ஆனால் யான திருமணஞ் செய்துக்கொண்டபிறகு எனது தாய்தந்தையரைக் காணவேண்டும், அவர்கள் என்னை அந்நகரத்தி லிருக்கும்படி சொன்னாலென்ன செய்கிறதென்றான். சரி: அவ்விதமானாலும்

உமது இஷ்டமென்று சொன்னான், விவேகானந்தனும் திருமணவைபவத்திற்குச் சம்மதித்த படியால், அங்கநகரத்தரசன் தனது புத்திரியை விவேகானந்தனுக்கு கலியாணஞ் செய்துவைத்து வேண்டிய சீதன வரிசையாவும் மனக்களிப்புடன் கொடுத்தனன்.

இங்ஙனம் இவர்கள் அங்ஙனம் சிலநாளிருந்த பின்னர், விவேகானந்தன் தனது பத்தினிகள் சகிதம் குணபூஷணி விரதபூஷணியையும் அழைத்துக்கொண்டு அரசனால் கொடுக்கப்பட்ட, சீதன வரிசையுடன் சில சேனாவீரரையும் துணைபற்றி அந்நகரைவிடுத்து ஆரண்ய மார்க்கமாய் வருகலாயினன், ஆனால் முன்னம் இவர்கள் தனியாய் வரும்போது, காய்கனிகளைப் புசித்துக்கொண்டு காலங் கழித்திருந்தார்கள். தற்சமயம், அப்படியாதொரு கஷ்டமுமில்லாமல் சுகஜீவிகளாய் வழியிலெதிருற்ற நந்தவனங்களிற்றங்கி கூடாரங்களியற்றி சேனைகளுடனிருப்பதும், அவர்கள் அவர்களிற் சில சுயம்பாகிகள் சமையல் வேலையை ஆரம்பஞ்செய்வதும், சேனாவீரர் கரத்திற்றனுசேந்தி வனத்திலுலாவும், பஷிகளையும் மான், கடம்பை, முயலினங்களையும் அஸ்திரங்களாலடித்துக் கொண்டுவந்து கொடுப்பதும், சுயம்பாகிகள். அவைகளைப் பக்குவமாய்ச் சமைத்து, அன்ன பதார்த்தமும், சமைத்து சகலரும் புசித்து மனோல்லாசமாய் இளைப்பாறிக்கொண்டு சற்றுநேரம் சயனித்தெழுந்து வழிநடப்பதுமாகவே வெகுதூரம் கடந்தார்கள் விவேகானந்தன் மனக்களிப்புடன் நமக்கு இனிமேல் நற்காலம் வாய்ந்ததென்று குணரத்னத் திடத்திற் புகன்று மனோல்லாசமாய் வருகையில், விரதபூஷணியும் குணபூஷணியும்; தமது தந்தையைக் காணவேண்டுமென்னும் விருப்பத்தைக் குணரத்தினத்திடத்திற் புகன்றார்கள். அவ்வார்த்தையைக் கேள்வியுற்ற குணரத்தினம் விவேகானந்தனுக்குச் சொல்லுகின்றாள். பிராணபதி, யாம் முன்னதாக அவந்திபுரிக்குப்போய் இந்த இரண்டு பெண்களை அவர்கள தகப்பன் முன்விடுத்து அவர்கள் மனமகிழச் செய்துவிட்டு, பிறகு நமது தேசத்திற்குப் போவோமென்று சொன்னாள். விவேகானந்தன் சொல்லுகிறான். பெண்ணேயானும் உனது மனதின்படியே உலக நன்மையைக் கருதி சகலரும் சுகஜீவியாயிருப்பதற்காகவே நினைக்கின்றேன். ஆகையால், யானும் இந்தப்பெண்களின் தந்தையாகிய அவந்திபுரியரசனைக் காணவேண்டுமென்று தான் செல்கின்றேனென்றான். இவ்விதமாகவே இவர்கள் பேசிக்கொண்டு போகும்போது அவந்திபுரியின் அருகாமையிலுள்ள நந்தவனத்தைக் கண்டார்கள். சேனாவீரரனைவரும் தமது வழக்கத்தின்படியே கூடாரமியற்றி சகலரும் மனோல்லாசமாயிருந்தனர்.

இங்ஙனம் இவர்கள்நிலை இத்தகையதாயிருக்கையில், அவந்திபுரியரசன் தனது புத்திரிகளை நினைந்து விசனமடைந்தவனாயிருக்கையில், மிரண்டவர் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேயென்று பயப்படும் விதமாய் விவேகானந்தன் தனது சேனைகளுடனே வந்

திருப்பதைக்கண்டு யாவரோ அந்நிய தேசத்தரசர் அமர்புரிய வந்தார்களென்றெண்ணியவர்கள் திடீரென அரண்மனையில் ஓடிவந்து அரசன்பாற் புகன்றனர். அரசன் ஆச்சரியமடைந்து ஆ! மந்திரி! நமது தேசத்தில் வேற்றரசர் படையெடுத்து வந்தனராம், சேனைகளைத் தயார் செய்துக்கொண்டு வருவாயென்றனன் அமைச்சனும் அவ்விதமே நன்றெனச் சம்மதித்து சேனைகளைத் தயார் செய்துக்கொண்டு தானும் சேனாவீரர்களுக்குத் துணையாய் நந்தவனத்திற்கு வந்தனன் அச்சமயம், விவேகானந்தன் மந்திரியைப் பார்த்துவிட்டு மனமகிழ்ந்து, குணபூஷணியையும் விரதபூஷணியையும் அழைத்துக்கொண்டுவந்து, அமைச்சனைக் கண்டுபணிந்து சொல்லுகின்றான், அக்காலிலெனக்கு அன்புடன் அன்னவஸ்திரங் கொடுத்து ஆதரித்த பிரபுவே உமது அனுக்கிரகத்தினால் எனக்கு யாதொரு கஷ்ட நஷ்டமுமின்றி நமது அரசபுத்திரிகளையும் அழைத்துக்கொண்டு வந்தேனென்றான். மந்திரியானவன் மனமகிழ்ந்து, விவேகானந்தனுடைய சமர்த்தை வெகுவாய்ப் புகழ்ந்துக்கொண்டு, அவர்களனைவரையும் அரண்மனையில் அழைத்துக்கொண்டு வந்தான்.

இங்ஙனம் இவர்களனைவரும் மனோல்லாசமாய் வருகையில், அரண்மனையிலிருந்த இறங்கிவந்து தனது குமாரத்திகளாகிய விரதபூஷணி, குணபூஷணியையும் பார்த்து ஆனந்தக்கண்ணீர் சொரிந்து, அம்மா! நீங்களிருவருமென்ன விடுத்து எங்ஙனம் பிரிந்துபோனீர்களென்று வினவினன். அந்த இரண்டு பெண்களும் தமது தந்தையைப்பணிந்து சிற்றன்னையால் நேர்ந்தவை யனைத்தும் விபரமாய்ப் புகன்று தாங்களிருந்த தேசத்தின் சமாச்சாரமும் விபரம்விபரமாய்ப் புகன்றனர். அரசன் மிகவும் மனங்கொதித்து இனி அந்த துன்மார்க்கியை சிரச்சேதம் செய்வீர்களென்று கொலைஞர்களுக்கு ஆக்ஞாபித்தனன். விவேகானந்தன் தடுத்து அரசே! தாங்கள் அவ்விதமாய்க் கோபியாதீர். ஒவ்வொருவருக்கும் ஊழ்வினையே முன்வந்து கஷ்டப்படுத்துகின்றன, அவ்விதமாகவே உமது புத்திரிகள் முன்ஜெனனத்திற்செய்த கர்மவினையின்படியே சிற்றன்னையால் பற்பலவித துயரடைந்தனர். ஆகையால் அவர்கள் முன்ஜெனனத்திற் செய்த கர்மவிமோசன மாய்விட்டது. இனி இவர்கள் சுகஜீவியா யிருப்பார்கள். தாங்கள் இராஜ பத்தினியைக் கொலைசெய்ய வேண்டாமென்று தடுத்துவிட்டனன். அரசன் விவேகானந்தனுடைய நற்குணத்திற்கு மெச்சி புகழ்ந்து கொண்டாடினான். மந்திரி பிரதானியரும் சரிதானென்று சம்மதித்தார்கள். அரசனும், அந்த துன்மார்க்கியை நாம் கொலை செய்வதினால் பிரயோசன மில்லையென்று விடுதலை செய்து அரண்மனை புரோகிதரால் சுபதினத்தில் மணவறைஜோடித்து தனது புத்திரிகளாகிய விரதபூஷணியையும் குணபூஷணியையும் விவேகானந்தனுக்குக் கலியாணஞ்செய்து வேண்டிய சீதனவரிசைகளுந் தந்தனன். விவேகானந்தன் தனக்குக் கிடைத்த மனைவியருடன் சில

காலம் சுகஜீவியாயிருந்து, சிலகாலஞ் சென்றபின்னர் அரசனிடத்தில் உத்திரவு பெற்றுக்கொண்டு தனது சுயதேசமாகிய தர்மபுரிக்குப் போவதற்காக பிரயாணமாயினான். அரசன் தனது மருமகனுக்குத் துணையாக சேனைவீரர்களை அனுப்பினான். விவேகானந்தன் தனது பத்தினிகளுடனே சேனைவீரர் துணையுடன் அவந்திபுரியை விடுத்து ஆரண்யமார்க்கமாய் நடந்து தர்மபுரியின் சமீபத்தில் வந்தனன்.

அந்நகரவாசிகள் விவேகானந்தன் வருகையை தமது அரசனாகிய அமிர்தவசனனுக்குச் சொன்னார்கள். அம்மன்னன் மனமகிழ்ந்து தனது மந்திரி பிரதானிகளுடனே மைந்தனை எதிர்கொண்டழைத்து வந்தனன். விவேகானந்தன் தனது பத்தினிகள் சகிதம் சேனைவீரருடனே அரண்மனையில் வந்தவுடனே மஹாராணியாகிய இரஞ்சிதபூஷணி தனது புத்திரனாகிய விவேகானந்தனைப் பார்த்தவுடனே மனமகிழ்ந்து இனி நமது மனசஞ்சலந்தீர்ந்ததென்று அப்பா எனது அருந்தவப் புத்திரனே யானுன்னைப் பிரிந்து வெகுவாய்த் துயரடைந்திருக்கையில் நீ எனது மனவிசாரத்தைப் போக்குவதற்கு மனமகிழ்வாய் வந்தனையே! மகனேயென்று ஆசீர்வதித்தனள். அருகிலிருந்த குணரத்னம் முதலான பெண்களெல்லாம் பார்த்து அவர்களுடைய அழகானந்த முகவர்ச்சு தேஜஸையும் அடக்கம் பொறுமையையும் புகழ்ந்துபேசி, அடா மகனே உனது கஷ்டநஷ்டமனைத்தும் விலகிப்போச்சுது, இனி சுகஜீவியாயிருப்பாயென்று ஆசீர்வதித்தனன். விவேகானந்தன் நடந்துவந்த களைதீரும்படியாய் வெந்நீரால் ஸ்நானஞ்செய்து பலகாரங்களைப் புசித்து மனமகிழ்வாயிருந்தனர். அமிர்தவசனன் தனது புத்திரனை அரண்மனையில் வரவழைத்து அவனால் நடந்தவையனைத்தும் ஆதியோடந்தமாய்ச் சொல்லக் கேட்டுவியுற்று ஆச்சரியமடைந்தவனாய், எனது அருந்தவப் புத்திரனே இனி நமக்கு நற்காலம் வந்ததென்று அன்பான வார்த்தைகளால் மனமகிழச்செய்து, அரண்மனைப் புரோகிதர்களால் ஓர் சுபதினமேற்படுத்தி, தனது நகரமுழுதும் சிங்காரிக்கச்செய்து சிற்பசாஸ்திரிகளால் அரண்மனையை அலங்காரஞ்செய்து விவேகானந்தனுக்கு மங்களஸ்நானஞ்செய்துவைத்து மணிமகுடஞ்சூட்டி தர்மபுரியைப் பரிபாலனஞ்செய்யும்படியாய் ஆக்ஞாபித்தனன். விவேகானந்தன் செங்கோற்கரந்தாங்கி சிம்மாசனத்தமர்ந்து இராஜரீகஞ்செய்துகொண்டு தனது மனைவியருடனே மனோல்லாசமாய் வாழ்ந்துகொண்டு புத்திரசம்பத்துடனே சதாகாலமும் பகவத் பக்தியானந்தமாயிருந்தனன்.

சுபம்! சுபம்!! சுபம்!!!

விதியை மதியால் விலக்கிய விவேகானந்தன்

சம்பூர்ணம்.

---

